# இன்பத் தமிழில் ஏசுநாதர் [தெய்வீக அந்தாதி]

இயற்றியது :

முன்னிலை கண்ட முனிவன்
மண்ணிலை கண்ட மகான்
தன்னிலை கண்ட தவசி
மெய்நிலை கண்ட மேதை

கருணையானந்த குருகுலத் தொண்டன்
(வாரிசு)

ஞானபிதா :

தமிழ்மாமணி-கவியோகி-நாச்சிகுளத்தார்

# இன்பத் தமிழில் ஏசுநாதர்

## (தெய்வீக அந்தாதி)

பாடல்களை இயற்றியவர் :


முன்னிலை கண்ட முனிவன்
மண்ணிலை கண்ட மகான்
தன்னிலை கண்ட தவசி
மெய்நிலை கண்ட மேதை
கருணையானந்த குருகுலத் தொண்டன் (வாரிசு)


ஞானபிதா :

தமிழ்மாமணி-கவியோகி - நாச்சிகுளத்தார்

மூன்று இலட்சம் கவிதைகள் பாடியவர் அறுபது தலைப்புகளில் ஒரு இலட்சம் கவிதைகளை அச்சாக்கி உள்ளார்.


விற்பனை உரிமை :

**பாரி நிலையம்**

90, பிராட்வே, சென்னை - 600 108.

போன் : 044-25270795

## புத்தக விபரக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | இன்பத் தமிழில் ஏசுநாதர் (தெய்வீக அந்தாதி) |
| ஆசிரியர் | : | தமிழ்மாமணி கவியோகி. நாச்சிகுளத்தார் (ஹாஜி - முகம்மது யூசுப்) |
| நூல் வகை | : | மரபுக்கவிதை |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| முதற் பதிப்பு | : | ஆகஸ்ட் 2009 |
| தாள் | : | மேப்லித்தோ 11.2 Kg |
| புத்தக அமைப்பு | : | கிரவுன் 1/8 |
| அச்செழுத்து | : | 11 புள்ளிகள் |
| மொத்த பக்கங்கள் | : | 80 |
| விலை | : | ரூ.30/- |
| அச்சிட்டோர் | : | மாஹின் பிரிண்டர்ஸ்<br>28, அப்பு மேஸ்திரி தெரு,<br>சென்னை - 600 001.<br>போன் : 044-25225143 |
| ஒளி அச்சு கோர்வை | : | கியூஜன் டெக்னாலஜி<br>நெ.2, அஜீஸ் பில்டிங், முத்துப்பேட்டை,<br>திருவாரூர் மாவட்டம் - 614 704.<br>போன் : 9943134124, 04369-298146. |
| வெளியீடு | : | நாச்சிகுளத்தார் பதிப்பகம்<br>உதயமார்த்தாண்டபுரம் அஞ்சல்,<br>திருவாரூர் மாவட்டம் - 614706.<br>கைபேசி : 04369-245413 |

II

## என்னுரை

அறிவியல் பெருகி விட்டதாகக் கருதப்படும் இன்றைய நவநாகரீக உலகத்திலே நெறிப்பிறழ்ச்சி காணக்கிடப்பது பரிதாபத்திற்குறியது. நாளுக்குநாள் மக்களின் மனப்பாங்கு கெட்டுத் தீநெறித் தொடர்பு வருவது தவிர்க்க முடியாததாக விருக்கிறது. கொலை, கொள்ளை, கற்பழிப்பு முதலிய துர்ச்செயல்கள் குறித்துச் செய்தித் தாள்கள் ஒவ்வொரு நாளும் செய்தி வெளியிட்டுக் கொண்டு வருவதைப் பார்க்கும் போது மனிதன், மனிதனாக வாழ முயற்சிக்காமல் மிருக உணர்விலேயே தத்தளித்துக் கொண்டிருக்கின்றான் என்றே கருத வேண்டியிருக்கின்றது.

நபிமார்களும், இறையடியார்களும், ஞானப் பெருமக்களும் உலகத்திற் றோன்றி வேதங்களையும், நீதி சாத்திரங்களையும், அறநெறி நூல்களையும் உலகுக்காக்கி ஒழுக்க நெறியின் உயர்வை நிலைநாட்ட நனிமுயற்சி மேற்கொண்டு முயன்ற பின்னருங்கூட மனிதப் பண்புக்குப் புறம்பான செயல்களும் அநீதிகளும் நடைபெறுவதைக் காணுந்தோறும் உண்மை உணர்வுடையார் நெஞ்சம் அனலிற் பட்டப் புழுப்போல் துடிக்கவே செய்யும்.

மனிதன் கணநேரத்தில் மிருக உணர்வுடையவனாக மாறிவிட முடியும். ஆனால் மனிதன் மனித உணர்வுடனேயே இருப்பதுதான் மிகவும் கடினமாகும்.

உலக உத்தமர் என்று போற்றப்பட்ட மகாத்மா காந்தியையும் மாபெருந் தொண்டர் லியாகத் அலியையும், உலக வரலாற்றிலேயே சிறந்த உன்னதமான இடத்தைப் பெற்றிருந்த அமெரிக்க அதிபர் கென்னடியையும் துப்பாக்கி கொண்டு கோரக்கொலை செய்ததன் மூலமும், மற்றும் பல அடியார்களையும், மகான்களையும், தொண்டர் களையும் கொடுமைக்குள்ளாக்கிச் சித்ரவதை செய்ததன் மூலமும்

உலகம் திருந்தி நன்னிலைப் படவில்லை என்பதையே மெய்ப்பித்துக் கொண்டிருக்கிற தெனலாம்.

மனிதன் ஏன் தீய நெறிநின்று உலக நலத்தைக் கெடுக்க வேண்டும்? இதைப்பற்றி மனிதன் சிந்திக்கத் தெரிந்துகொண்டால் அன்றே அவன் மனிதனாகி விடுவான். ஆனால் இதைப்பற்றி சிந்திப்பார் யார் என்பது கேள்விக்குறியாக இருக்கிறது. எனினும் எல்லாம் வல்ல இறைவன், உலகில் தீமை மிகுக்கும் போதெல்லாம் தனது தூதர்களை அனுப்பி நந்நலம் பெருக வழிசெய்தே வருகிறான் என்பதை வரலாறு மெய்ப்பித்துள்ளது.

ஆதிசங்கரரும், புத்தரும், வள்ளுவரும், ஏசுநாதரும், நபிகள் நாயகமும் இறைத்தூதர்களாக வந்து உலகை நல்வழிப்படுத்தி உய்வித்தனர். இவர்களும் இவர்களன்ன பிறரும் கூறிய அறநெறிகள் உலகத்தின் பொதுச் செல்வங்கள். இவர்களால் அருளப்பெற்ற அறநெறி மாண்புகள் ஒரு சாரார்க்கு மட்டுந் தான் சொந்தம் என்று உரிமை கொண்டாட நினைப்பதும் அல்லது மறுப்பதும் மூடத்தனமாகும்.

இப்பெரியார்கள் தாங்கள் கூறியது ஒருசாரார்க்கு மட்டுந் தான் உரிமையுடை யதெனக் கூறியிருப்பின் அவற்றை உலகம் ஏற்றுக் கொண்டிருக்க முடியாது. குறுகிய நோக்கமுடைய சிலர்,அந்த நூலை நாம் படிக்கக்கூடாது. அதில் "அது"இருக்கிறது. இவர் வரலாற்றைப் படிக்கக்கூடாது. இதில் "இது" இருக்கிறது. அவர்கள் அப்படிச் செய்கிறார்கள். இவர்கள் இப்படிச் செய்கிறார்கள். என்று நிலவைப்பார்த்துக் கூவும் சேவல் போலவும், மலையை நோக்கிக் குறைக்கும் நாயைப் போலவும், ஆடத் தெரியாதவன் அரங்கு சரியில்லை என்றுகூறியது போலவும் உளரித் திரிகின்றனர். இந்நிலை நீடிப்பின் உலகத்தின் அறியாமை இருள் மேலும் பெருகுமேயொழிய அறிவென்னும் ஒளிபெருக வழியே இல்லையெனலாம்.எனினும் இறைத்தூதர்களும், மெய்யடியார்களும், நெறிமுறைகளையும் நினைவு கூர்வதன் மூலமும்,

செயற் படுத்துவதன் மூலமும் மனித வாழ்க்கையை நிலைப்படுத்தமுடியும் என்ற நம்பிக்கையால் இறைத்தூதர்கள் பலருள் ஒருவரான இயேசு பெருமானின் வாழ்வியற் குறிப்புகளையும், மறைமொழிகளையும் தொகுத்துச் சுருக்கியுரைக்க அடியேன் முற்பட்டேன்.

ஞானநிலை என்று சொல்லும் மகாகாரண சக்தி பெற்றுச் சோதியிற் கலந்து சுருதியிற் சேர்ந்து அதுவே தானாக இருக்கும் அருப நிலையை யோவான் என்னும் ஞான முனிவரால் கைவரப்பெற்ற தேவகுமாரன் ஏசுநாதரைப்பற்றியும் அவருரைத்த மெய்திகழ் ஞானநிலைகளைப்பற்றியும் எத்தனையோ உலக மொழிகளில் எத்தனையோ பேரறிஞர்களால் தெளிவுற எடுத்தியம்பப் பட்டுள்ளது. மகான் கிறிஸ்து பெருமானின் அருமைகளையும், அற்புதங் களையும், மெய்நெறிகளையும் ஓரளவுக்காயினும் தெரிந்த அடியேனும் அதுகுறித்துச் சிலது சொல்லும் நோக்கோடு இச்சிறு கவிதைப் பனுவலை இறையருளால் இயற்றி முடித்தேன்.

அருள்வழி செல்வோரும், பொருள்வழி செல்வோரும், இரு வழியுஞ் செல்லாது கொன்னே வாழ்நாளைப் போக்குவாருமாகிய பலதிறப்பட்டார் நடுவிலே என்னோடு படித்தவரும், என்னோடு பழகியவரும், என்னோடு பிறந்தவரும் எதை எதையோ செய்து திரிகின்ற நிலையிலே மெய்ப்பரம் பொருளாகிய இறைவன், என்னை எங்கோ இழுத்துச் செல்லும் வழியிலே கண்டவையும், காண வேண்டியவையும், சிந்தித்தவையும், சிந்திக்க வேண்டியவையுமான எத்தனையோ கருத்துகளைச் செந்தமிழ்ப் பாக்களாக உளற வைத்தும் இப்போது “ ஏசுவின் இனிய கீதம்” என்னும் இப்பனுவலையும் என்னைக் கொண்டு உளற வைத்துள்ளான்.

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன் தன்னை நன்றாகத் தமிழ் செய்யிமாறே" என்று ஞானப்பெருமகனார் ஒருவர் கூறிய மெய்யுரைக்கேற்ப என்னை எதற்காக இறைவன் படைத் தானோ அது தொடர்ந்து செயல்பட வழியமைத்துத் தந்த இறைவனுக்குச் சிரந்தாழ்த்தி நன்றி சொல்லிக் கொள்கிறேன்.

மேலும் இப்பனுவலை நன்முறையில் சரிபார்த்துத் தந்த அருட்பெரும்புலவரும், எனது குருமூர்த்தியுமாகிய

என்னுயிரே! எழிற்றமிழே! இளந்தென்றல்போல்
எங்கட்கும் அறிவீந்த இன்பக் காடே!
பொன்னுயிரே! பூந்நமிழே! பூத்து நிற்கும்
பொழிவுள்ள பூஞ்சோலை மணமே! எம்மைத்
தன்னுயிர்போல் நினைக்கின்ற சால்புக் கோவே!
தனிமைக்கு அமுதீயும் ஞானத் தேவே!
முன்னொருவர் உன்னைப்போல் பிறந்த தில்லை!
முதறிவே! இனிமேலும் பிறப்பார் உண்டோ?

கடல்திறந்த மடைவெள்ளம் உன்றன் பேச்சு!
காணார்க்கும் அமுதந்தான் உன்வாய் வீச்சு!
மடல்அவிழ்ந்த தாழம்பூ மணத்தைப் போல
மாற்றார்க்கும் அமுதாகி ஏற்ற பேர்க்கும்
உடனறிந்தே உவக்கின்ற உயிர்த்தேன் ஆச்சு!
ஒழுக்கத்தின் விழுப்பத்தால் உயர்ந்தோய் புஞ்சைத்
திடலெனினும் செழிக்கச்செய் அமுதம் நீயே!
திருந்தாதார் தம்மிருளுக் கொளியும் நீயே!

வல்லவரே! உம்மிடத்தில் பலநாள் யாமும்
வாய்ந்தபல் கருத்துக்கள் ஆய்ந்த துண்டு!
நல்லவரே! அச்சமயம் எல்லாம் உங்கள்
நயங்கொழிக்கும் தேன்வாயில் இருந்து சிந்தும்
சொல்லிதழில் அடங்காத சுவையைச் சின்னச்
சொல்லுக்குள் சொல்லென்றால் சொல்லலாமோ?
கல்லாத மூடர்க்குக் கரும்பும் நீயே!
கற்றவர்க்குக் கம்பன்பாற் கடலும் நீயே!

ஞானத்தின் பாசறையாய் நிற்கும் எங்கள்
நல்லபெரும் புலவர்திரு இராம தாச!!
மோனத்தின் தவவீட்டைக் கண்ட கோனே!
முதறிஞா! இலக்கியப்பே ரவையார் கொண்ட
தேனொத்த ஓர் ஆவல் துடிப்பால்; இந்தத்
திருச்சபையில் பொன்னாடை போர்த்து தற்கும்
ஆனஒரு செயல்செய்தோம் ! அதனால் எம்மீர்
அரும்பிறவிப் பயன்பெற்றோம் ! ஆ! ஆ! இன்பம் ! !

வானத்தை அண்ணாந்து பார்ப்பேன் ! பின்னர்
வாய்மைக்கும் பிறப்பிடமே உன்னைப் பார்ப்பேன் !
நாணத்தால் தலைகவிழ்வேன் ! ஏன் ? ஏன்என்றால்
நற்றலைவா உன்னறிவோ வானை விஞ்சும் !
மானத்தேன் மறவரினைப் போலும்; ஏறு
மயிலாடும் வேலவனைப் போலும்; நின்றாய் !
தானத்தின் தவமணியும் நீயே! எங்கள்
சாவுக்கும் வாழ்வுக்கும் துணையும் நீயே!

வெள்ளாடை உடுத்திடுவாய் பார தீ போல்
வெண்மையிலே தலைப்பாகைக் கட்டிக் காள்வாய்!
வெள்ளைநல் இதயத்தால் வாழ்வாய் ! என்றும்
வீரத்துள் ஈரத்தைக் காட்டி நிற்பாய் !
கள்உன்றன் கவிஅமுதம் கலைமகள்போல்
கனிவூட்டும் உன்அறிவுப் பாக்கள் ! ஆ! ஆ!
எள்ளென்றால் பிறரெல்லாம் நீயோ வானார்
இமயந்தான் ! இது உண்மை! புகழ்ச்சி இல்லை.

சாரங்க பாணியெனும் சான்றோன் ! பண்புத்
தமிழ்வேளாம் ! தமிழ்முரசின் ஆசான் ! அன்பே
ஓரங்கம் கொண்டதுபோல் மலாயா நாட்டில்
ஒப்பற்ற பணிபுரிவோன் ! மற்றோர் வாழ்த்த;
காரிங்கு வந்நதுபோல் வந்தாய் ! தேன்நாண்
கைமாறு கருதாதா சேவை செய்தாய் !
பாரிய்கே! உன்தொண்டர் பிரிவை எண்ணிப்
பரிதவிதிதோம் ! பின்வருகை எணிப்பூ ரித்தோம் !

நெஞ்சத்தின் நேர்மைக்கே மதிப்பை ஈந்து
நிலையான புகழ்கண்ட கலைவள் ளல்எம்
அஞ்சாத டாக்டர்அப் துல்லா வாழ்த்த;
ஆய்தமிழில் வல்லவராய்ச் சேவை செய்து
விஞ்சம்சீர் புகழ்கண்ட காசி நாத
வெல்மன்னத் தலைஏற்க; நகரத்தந்தை
எஞ்சாதே ஈத்துவக்கும் பூபதி யார்
இதயத்தால் வழியனுப்ப; அறிஞர் பல்லோர்:

வாழ்த்தளிக்க வழி அனுப்பி வைக்கின் றோம்யாம் !
வரலாறு காணாத புதுமைக் கோலம் !
தாழ்வுக்கும் அழு தீந்து வாழ வைக்கும்
தனிப்புகழுள் மலேசியத்தில் சென்று மீண்டும்
ஏழ்கடல்சூழ் புகழோடு வருக! என்றே
எம்கண்ணீர் ஆனந்தக் கண்ணீர் சிந்தி
வாழ்மனத்தீர் அனுப்புகிறோம் ! வாழ்க! வாழ்க! !
வாழ்ஞானப் பழம்நீயே! வாழ்க! வாழ்க! !

எனப் பாராட்டப்படும் தவத்திரு சுவாமி இராமதாசர் அவர்கட்கும், சாற்றுக்கவிகளும், வாழ்த்துரைகளும் வழங்கிய பெரியோர்கட்கும், இந்நூலின் விற்பனை உரிமையை ஏற்றுக் கொண்ட பாரிநிலையத்தார்க்கும், நன் முறையில் அச்சிட்டுத் தந்த மாஹின் பிரிண்டர்ஸ் அச்சகத்தார்க்கும் எனது அன்புகனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்

இங்ஙனம்
பன்னூலாசிரியர்
கவிஞர்நாச்சிகுளத்தார்

## சான்றிதழ்

சந்தமார் புவியின்மிசை நிந்தனைகள் மிக்கியே
சலைத்துத் திரிந்த காலை
சகத்தினர்க ளொருபடித் துய்ந்துநல மேறவே
சக்தியொரு வடிவாகியே
பந்தமார் கன்னிமரி சூசையார் செய்தவப்
பாங்கினிற் றேவனருளால்
பவிசினொடு தோன்றியே அவிசிவா சிகள்தமைப்
பதமுறச் செய்யும்வண்ணம்
சிந்தைநிறை பத்தியின் வித்தாகி வந்துநற்
சேசுவெனும் நாமமுடனே

செப்பமுறு மிராறு மாணவர்கள் நெஞ்சமாம்
செவ்வியார் கூடையதனில்
விந்தைசேர் உலகியத் தெய்வீக ஞானமாம்
விகசிக அப்பமதனை
வேண்டிய மட்டும் நிரப்பியருள் செய்திட்ட
வித்தகன் றாள்வாழியே !!

கதியெலாந் தந்திடுங் கர்த்தனின் ஆணையாற்
கடலாடை சூழ்பு - வியற்
கலைஞான தத்துவத் தவஞான யோகியர்
காலகா லத்தில்மேவ
அதிமா தவத்தினர் நபிமார்கள் தங்களை
அருமையுட னேபடைத்து
அற்புதம் பலசெய்ய வேதமா கலைகளை
அவர்தமக் கருள்செய்துபின்
விதியெலாம் ஒன்றாய் உரைத்துமோ சேசுக்கு
விரும்புஞா னத்தைநல்கி
வித்தகச் சேசுவைப் புவியோர் தமக்கொரு
விரிந்தநற் கொடை யாகவே
புதியசக் திகள்நல்கி யற்புதம் பலசெய்து
புவிதனை யோம்புவண்ணம்
போதகன் செய்தனன் ஆதியக் கர்த்தனின்
புனிதசே வடிபோற்றுவாம் !!

சத்தியத் தொருவடிவ ஞானக் களஞ்சியம்
சர்வமத சம்பூரணம்
சதியெலாந் தாங்கிடும் நெஞ்சகம் பெற்றதோர்
சாமிதிரு ஏசுநாதர்

சித்தியின் போதால் என்பினே யோர்நபி
தோன்றுவன் எனச்சொற்றதோர்
செம்மைவடி வாகவே நாயகக் குருசீலர்
தோன்றினர் புவிமீதிலே

முத்தியற நின்றசமு தாயமதை யேற்றியே
முத்திபெற வைத்துநித்தம்
முயன்றநற் றவசீலர் முகம்மது நபிமரபில்
மொய்ம்புடன் வந்த செல்வன்
பத்திசேர் நாச்சிகுள யூசுப் பெனும்பெயர்ப்
பாவலன் இனிமையுடனே
பாடினன் யேசுதிரு நாமந் தழைக்கவே
பயன்கொண்டு வாழ் மாதோ!!

(வேறு)

தானதவ மன்புபொறை தன்னாற் புவிகாத்த
மோனபரன் சேசடியை முன்.

முதுதமிழ்ப் பெரும் புலவர்
சுவாமி இராமதாசர்,
பினாங்கு.

## சான்றிதழ்

திருமிகுத்துப் புவிமாந்தர் சிறக்க வேண்டித்
தெய்வநெறி அறமாண்பு செழிக்க வேண்டி
அருள்மிகுத்து வாழ்வின்பம் ஒளிரத் தீதார்
அநீதிசெயுங் கொடியவரைத்திருத்தற்கென்றே
இருள் தவிர்க்கும் பரிதியென ஏசு வென்னும்
இருல்ஞான வற்புதனை உலக னுப்பிப்
பெருநெறியைப் பரப்பிவைத்த ஈசன் பாதம்
பேருலகோர் போற்றிசெயப் பெருகும் இன்பே!

பரலோக இன்பநெறி பகர்நாத செம்மல்
பாவியரை மன்னிக்கப் பிறந்த எங்கோ
கரவாது புவிக்கருளை இனிதாய் நல்கிக்
கனிவினொடு காத்திட்ட கர்த்தர் யேசு
அனறவொழுங்கு பிறழாது உரைத்த வேதம்
அவனியுளோர் தேர்ந்தொழுகின்முக்தியுண்டே
மறவாது ஏசுநெறி மனத்திற் கொண்டு
வாழ்வார்க்கு மரணபயம் உலகி லின்றே! !

கன்னிமர் யாள்சோசப் கருதி நோற்ற
கடுந்தவத்தி னாற்றேவ மைந்தன் ஏசு
நண்ணியுல கோர்பக்கல் நயந்து வந்து
நடுங்குதுயர் தனையொழித்து நலங்கள்செய்தார்
கன்னியரும் காளையரும் பெர்யோர் யாரும்
கருத்துடனே ஏசுநெறி கடைப்பி டித்தால்
முன்னினிதாய் இன்புவரும் வாழ்வும் நன்றாம்
மூடநெறி வீழாதீர் பாவமாமே! !

ஏசுமகான் சொன்னநெறி யாரே சொன்னார்
எல்லோர்க்கும் இன்பூட்டுங் கருணைப்பேச்சால்
வாசிதந்தார் அருள்தந்நதார் அரவ ணைத்தே
வாருங்கள் தருவேனென் றின்பு தந்தார்
கூசிடுவார் ஏசுமொழி குறித்துக் காணார்
குணங்கெட்டு மனங்கெட்டு அலறி வீழ்வார்
சேசுபதம் போற்றிசெய்து பரலோ கத்திற்
செம்மைபுற வாழுநிலை தேர்கு வீரே! !

விஞ்சைபல புரிந்துலகை மேன்மை செய்த
மெய்த்தவஞ்சேர் ஏசுநெறி வெகுவாய்த் தேர்ந்து
அஞ்சலற வாழ்கவென ஏசு கீதம்
ஆர்வமுடன் போற்றிசெயப் பனுவல் யாத்தார்
செஞ்சொன்மிகு நாச்சிகுளக் கவிஞர் யூசுப்
திருவோங்கும் இந்நூலைத் தெளிய நன்றே!!
கொஞ்சுதமிழ் இனத்தீரே வருவீர் கூடிக்
கோணாத வாழ்வின்பங் கூடுந் தானே! !

**கவிஞர் வீ.கே. சுப்பிரமணியன்**
**பினாங்கு.**

## சான்றிதழ்

முதுதமிழ்ப் புலவர் எங்கள் மொய்ம்புறு ராம தாசர்
இதமுறு பக்கல் நின்றே இயற்றமிழ் முறையைக் கற்ற
மதிமிகு கவிஞர் யூசுப் மாண்புறு ஏசு நாதர்
பதம்பணிந் துரைத்த கீதம் பாரினில் சிறக்குந் தானே! !

இருள்கடிந் தோச்ச வல்ல இயேசுவின் இனிய கீதம்
பொருளுணர்ந் தோது வார்க்குப்புகழொடு பெருமை யுண்டாம்
அருள்தரும் ஏசு பாதம் அண்டினார் மோட்சங் கண்டார்
மருள்கெட வைத்த தேவ மைந்தனைப் போற்றி செய்வாம். !

அற்புதன் அறத்தின் தூதன்அருட்கொடை வழங்குஞ் செம்மல்
பொற்பதம் பணிந்த பேர்க்குப் புவனத்தில் துன்ப மேது
சொற்பதங் கொண்டே ஏசு தூவடி பணிந்து போற்றின்
துற்பவம் நீங்கி இன்பந் துலங்கிடும் வாழ்வும் நன்றே! !

அன்னைஎம் மரியாள் சோசப்அருந்தவத் துற்ற ஏசு
நன்னயந் தேர்ந்து ரைத்தநாச்சிநற் குளத்துச் செல்வர்
சொன்னயக் கவிஞர் யார்க்கும்தொண்டராய்த் திகழும் யூசுப்
இன்னினி திறைநன் நோக்கால் ஏற்றமோ டுயர்க மாதோ! !

இளங்கவிஞர்
எஸ்.கே.வடிவேலு,
பினாங்கு.

## சான்றிதழ்

### வெண்பா

அமரருள் உய்க்கும் அருள்ஞானந் தேர்ந்து
தமரெனவே யார்க்குந் தகவாய்-இமிழ்கடல்சூழ்
வையத்தில் நன்றுரைத்த மாண்புதரு ஏசுபிரான்
துய்யபதம் போற்றல் சுகம்.

சிலுவை சுமந்த தெளிந்தமெய்ஞ் ஞானி
சிலுவை யறைபட்ட செம்மல்-அழுஞ்சேய்க்குத்
தாய்போற் பரிந்தூட்டுந் தண்ணளிசேர்ஏசுபிரான்
வாய்மொழிவே வேதம் வரை.

பாவிகளை ரட்சிக்கப் பாரினிலே வந்துதித்த
தேவ குமாரன் திருப்பாதம்-மேவிடிலோ
இன்பம் பெருகி இயல்ஞான மோங்கியறப்
பண்புஞ் சுடரும் பகர்.

கர்த்தர் இயேசு கருணைபொங்க மேதினிக்கு
அர்த்தமுடன் சொன்னநெறி ஆய்ந்தொழுகின் சற்குணராய்
வாழ்ந்து மகிழ்ந்து வளமான பேறுறலாஞ்
சூழ்ந்து கிறிஸ்தொலியைச் சொல்.

கன்னி மரியாள் கவின்சேர் இயேசுமகான்
நன்னயஞ்சேர் வாழ்வும் நறுநெறியும்-முன்னினிதாய்
ஆய்ந்துரைத்த நாச்சிகுள அன்பார் கவியூகப்
தோய்ந்த புலமைநலஞ் சொல்.

செங்கரும்பின் சாறாய்த் தெவிட்டாத முக்கனியாய்
இங்குரைத்தார் ஏசுநெறி இன்பாவாய்-மங்களஞ்சேர்
நாச்சி குளத்தார் நயஞ்சார்ந்த நற்பனுவல்
ஏச்சகலக் கற்றல் இசை.

ஏசு பெருமான் இனிய நறுங்கீதம்
தேசுபெற ஓதிச் சிறப்பெய்தி-வாசிமிகு
நாச்சி குளத்தார்க்கும் நல்வாழ்த்துக் கூறிடுவீர்
மாட்சி பெருகும் மனத்து

வாழ்கவே நாச்சி குளத்து மதிகவிஞர்
வாழ்கவே அற்புதஞ்சேர் மெய்ப்பனுவல்-வாழ்கவே
ஆதியும் வேத அருநெறியும் ஏசுபிரான்
போதமதும் நன்றே புகழ் ! !

**இளங்கவிஞர்வே.ஏசையா,**
**பினாங்கு.**

அன்பே தெய்வம் ! அதுவே எல்லாம்

# இன்பத்தமிழில் ஏசுநாதர்

## காப்பு
## (கலி விருத்தம்)

ஆதி நாதன் அரியசர் வேசுரன்
ஜோதி நாதன் சுடர்தவ நாயகன்
நீதி நாதன் நிமலப் பரம்பொருள்
சீத பாதம் தினந்துதிப் பாமரோ.
செப்பும் மாதவச் சோசப்பு மேரியின்
நட்பி லேகர்த்தன் நல்லருள் மேவிட
ஒப்ப யச்சுதன் தோன்றினன் ஏசுவாய்
அப்பன் தன்றிருத் தாளடி போற்றுவோம் !

## அடியார் வணக்கம்
## (வெண்பா)

அப்போஸ்த் தலர்கள் அறிஞர் பெருமக்கள்
தப்பாது பன்னிருவர் தானென்பர்-அப்பாகேள் !
கற்றேசு தாளைக் கடைப்பிடித்த யாவர்களும்
முற்றாக மாணவராம் முன்.

நல்லடியார் ஏசு நடந்தவழி சென்றக்கால்
நல்லடியா ராவர் நலமதனால் - நல்லடியார்
பாதம் பணிந்து பகலிரவும் சிந்தித்துப்
போதம் பெறவே புரி.

## (தமிழ் வாழ்த்து)

பண்டாய நான்மறையும் பாங்கார் கலைபலவும்
செண்டாகக் கைபிடித்த தீம்பாவை-வெண்டா
மரையகத்தாள் மாப்புலவர் நாவகத்தாள்என்றன்
உரையகத்தாள் உள்ளகத்தாள் ஓர்.

## (குரு வணக்கம்)

கலையும் கலைச்சொல்லும் கற்றுத் தெளிந்த
நிலையும் நெடுந்தவமு மோம்பித்-தலையாய
மாணவர்க்கும் மற்றார்க்கும் மாண்பருளிக் காக்கவல்ல
ஞானவருட் டாத்தாவை நாடு.

## நூல்
## (வெண்பா)

மெய்யோன் அருளதனால் மேரியம்மை யாரரிதாய்ச்
செய்த தவத்தாற் சிறப்புடனே – வையகத்தில்
வந்துதித்த ஞான வளமார் அருள்கிருஸ்த்து
சிந்தனைகொண் டேயுயரத் தேர்.

## (விருத்தம்)

கொடுமையும் பலியும் மிக்கக் குவிந்துமே மக்களெல்லாம்
அடிமையாய் நெறியை விட்டேயலைந்துமே திரிந்துத் துன்பம்
விடியுமா? என்றே யெண்ணி விசனமா யிருக்குங் காலை
திடீரென ஞான தீபம் தெரிந்திடா துதித்த தம்மா!

## (வெண்பா)

பாரதத்திற் றோன்றும் பவிசார் கிருஷ்ணனைப்போல்
சீருடுத்த " பெத்லஹேம்" செய்யூரில்-போரரத்தைப்
போக்கப் பிறந்திட்ட புண்ணியனாம் ஏசுதனை
ஆக்கமுறப் போற்றிடுவீ ராய்ந்து.

ஆட்டுமந்தைக் கூட்டத்தில் ஆதரவில் லாதபடி
நாட்டுக் கருளவந்த நல்லேசு-தேட்டமுடன்
ஜோதி யொளி கூட்டச் சுகிர்தமுட னேபிறந்தார்
வாதியா திஃதை மதி.

முன்பாக மூசா நபிக்கா யுரைத்தபடி
தெம்பா யிறைவன் திருத்தூதைக்-கண்பார்க்க
நட்சத் திரக்குறிப்பில் நல்லார் கிருஸ்துவினை
அட்சரத்தோ டாக்கினன்காண் ஆய்.

ஏசு புவியின். இருளகற்றத் தோன்றியதைத்
தேசில்லா மன்னன் தெரிந்துசினந்-தாசுடனே
ஏவினான் காவலரை எல்லாக் குழந்தையையும்
நாவியெனக் கொன்றான் நகைத்து.

வறுமைக் குடிபிறந்து மாவறுமைப் பட்டு
வறுமைக்குள் நல்லொளியை மாந்தி-வறுமையிலே
நின்று நெறியை நிலத்தார்க் கினிதுரைத்த
கண்டனைய ஏசுவைநீ காண்.

மெய்க்குருவாம் யோவான் விரும்பியேநற் றீட்சைதனைத்
துய்க்கவழி செய்து தொடருகையிற்-பொய்க்குருவாம்
சாத்தான் வழிமறித்துச் சங்கடங்கள் செய்கையிலே
காத்தார் இறையருளாற் காண்.

மெய்யருளைக் கண்டபின்பு வீடுபே றெய்துதற்குப்
பொய்யுடலை விட்டிந்தப் பூதலத்தில்-ஐயன்
அருளால் அருபமுற்று அன்பரின் முன்னே
மறுநாற்ப தில்வந்தார் மற்று.

எல்லா உயர்நிலையும் இன்போ டறிந்தபின்பு
வல்லான் நெறியை வளர்புவியில்-உள்ளாரச்
சொல்லிச் சுவைசேர்த்துச்சுந்தரமாய்க் காட்டுவித்தா
எல்லாரும் போற்றிட்டார் ஏற்று.

செய்த பிழையைத் திருத்தி உயர்வுறவே
ஐயன் தருவான் அருணெறிகள்-பொய்யதனை
விட்டுப் பெருமைதரும் மேன்மையுள உண்மைநெறி
தொட்டு நடக்கவென்றார் தேர்.

இருளை யகற்ற இயலறங்கள் செய்வீர்
பொருளைப் பெருக்கவழி பூண்மின்-அருளை
இனிதெய்த வேண்டின் இயேசுவின் வாக்கை
மணியாகக் கொள்வீர் மதித்து.

இறைநிலையை நாடின் இழிவுநிலை செய்யேல்
மறைவழியை நாட மயங்கேல்-துறைநெறிகள்
பற்றினால் வாழ்வு பகலவன்போ லேசுடரும்
வற்றுகுள மாம்விட்டால் மன்.

நன்றே பிறர்க்குதவி நாளும் மகிழ்விரென
அன்றே உரைத்தார் அருமைபெற-நன்றேதான்
ஏசுநந் நாதர் இயல்பை அறிந்தக்கால்
கூசுவரோ நன்றுசெயக் கூர்?

மாட்டுத் தொழுவத்தில் வாழ்ந்தாலும் ஞானமதைப்
பூட்டமறந் தாரில்லை பொன்மனத்தில்-ஏற்றமுற
ஏசுசொன்ன ஞானம் எவர்க்கும் நலமருளும்
வாசிபெறக் கொள்வீர் மகிழ்ந்து.

வேதம் உணர்ந்து விரிபொருளைத் தானுரைத்தார்
போதம் உரைத்தார் புரைதவிர்க்க-நீதம்
இதுவென்று கண்டோர் இனியவாழ் வுற்றார்
மதியற்றார் விட்டார் மதி.

அற்புதங்கள் செய்த அருளேசு நாதரது
பொற்பதங் கொண்டேத்தும் புனிதருக்கு விற்பனங்கள்
கூடும் இனிதாய்க் குவலயத்தில் நல்வாழ்வுங்
கூடும் இசையுங் குறி.

பிணியுற்றார் பக்கல் பிரியமுடன் சென்றுக்
கனிவுற்ற பேச்சாற் கவர்ந்து-துணிவாய்
இறையருளை நம்பி இருங்கள் பிணிதான்
குறையுமென்றார் ஏசு குறி.

இல்லச் சுழலின் இடைப்பட் டுழன்றவரை
மெல்ல விளித்து மிகவினிதாய்-வல்லயிறை
தன்மைகளைச் சொல்லித் தரித்திரத்தைப் போக்கியசீர்
நன்மைக் கிருஸ்துவைநீ நாடு.

மக்கள் நலத்துக்காய் மாண்ட பணிபுரிந்துத்
திக்கெல்லாஞ் சென்றுபுரைத் தீங்ககற்றி-ஒக்கலென
வாழும் முறையதனை மாபுவியி னோர்க்குரைத்தச்
சீலமிகு ஏசுபுகழ் செப்பு.

ஆதி யறிமின் அவனருளை நம்பிடுமின்
ஜோதி நெறியிற் றொடர்ந்துறுமின்-பீதிதரும்
பாவங்கள் போக்கிப் பவிசார் நெறியடைமின்
மேவும் ஜபமென்றார் மேவு.

உள்ளங் கடந்தார் உயர்ந்த நிலைபெறுவார்
கள்ளங் கடந்தார் கவினடைவார்-வெள்ளம்
வருமுன் அணைவைத்தார் மாண்புறுவார் தீது
வருமுன் தடுக்கவென்றார் வந்து.

எல்லார்க்கும் நன்றுசெய எண்ணிச் செயல்புரிந்தார்
வல்லார்க்கும் மற்றார்க்கும் மாண்புடனே-உள்ளுவந்து
செய்தார் நறும்பணிகள் தேயத்தார் வாழ்வுற்றார்
மெய்யரெனும் ஏசுபுகழ் மேவு.

வாதம் புரியாதீர் வம்புகளைச் செய்யாதீர்
போதம் இகழாதீர் பொன்மறையை-நீதமுறப்
போற்ற மறக்காதீர் பொய்வினைகள் செய்யாதீர்
ஏற்றமுற நாடுகவென் றார்.

உடல்நிலையும் ஆன்ம உயர்நிலையும் கன்மம்
படர்நிலையும் மண்நிலையும் பாங்காய்க் கடல்நிலையும்
வேறுவே றாய்ந்து விளக்கம் மிகவறிந்துச்
சீருறவே சொன்னமுறை தேர்.

சூதைக் கடிந்தார் சுடுவார்த்தை யாலேசும்
வாதைக் கடிந்தார் வசைகடிந்தார்-மாதை
விழைதல் வெறுத்தார் விளம்பரங்கள் விட்டார்
களவை வெறுத்தார் கடிந்து.

மன்றம் அறிந்திடவும் மங்கையரைக் காத்திடவும்
நன்று குடியை நடத்திடவும்-வென்றிதரும்
பொன்மொழியை நம்பிப் புவிவாழ்வைச் செய்திடவும்
உண்மையுரைத் தார்கிருஸ்திங் கோர்.

கொலையும் களவும் மதுவும்கீழ் பொய்யும்
புலையும் பிழையும் பொடித்துத்-தலையாய
மந்திரங்கொண் டோத வருமின்பம் யாவையுமே
தந்திரமாய்ச் சொன்னார் தக.

பொய்யும் புரட்டும் புரையும் புரியாமல்
வையத்தீர் என்றும் மனம்வாக்கு-மெய்ச்செயல்கள்
நன்றா யமைத்து நலம்நாடி நிற்கவென்றப்
பொன்றாப் புகழ்மொழியைப் போற்று.

சடமழியும் இந்தச் சகமழியும் மேனித்
திடமழியும் நல்லழகுந் தீயும்-தடவரைபோற்
செல்வ மழியும் செகத்தோரே! கண்டுணர்ந்து
அல்வழியை நீக்கவென்றார் ஆய்ந்து.

செல்வச் செருக்கென்றுந் தீமைக்கு வித்தாகும்
செல்வச் செருக்குத் திருவழிக்கும்-செல்வம்
நிலையாமை கண்டு நிலைத்த பணிக்காக்கிக்
கலைவளர்க்கச் சொன்னார் கனி.

கருணை வடிவான காரணனின் தொண்டர்
அருண கிரியெனவே ஆய்ந்து-திருவுளத்தைச்
சுத்தபரி பூரணமாய்ச் சோதியரு ளாலுயர்த்தி
நித்தம் உரைப்பார் நெறி.

தட்டுக நற்கதவு தாழ்திறக்கும் நந்நலங்கள்
கெட்டுவிடின் தம்மிடத்தே கேட்கவென்றும்முட்டமுட்டக்
கர்த்தனை நெஞ்சிற் கதித்துத் திருநெறிகள்
அர்த்தமுடன் சொன்னார் அறி.

ஏட்டிக்குப் போட்டியதாய் இன்னல் கொடுப்பவரை
போட்டிக் கிழுக்காமற் புன்சிரிப்பாய்-வேட்டமுடன்
நந்நலங்கள் செய்தவரை நாணமுறச் செய்வதுவே
புண்ணியத்தார் செய்கையென்றார் போற்று.

சாதிமத பேதமதை நீக்கிச் சமத்துவமாய்
ஓதிக் கடவுளிடம் ஒப்படைத்தார்-நீதிக்கோர்
காப்பரணாய் வந்த கருணைமிகு சேசுவை நீ
யாப்பணிசேர் நற்கவிகொண் டேற்று.

அடுத்துக் கெடுப்ப தறமல்ல வென்றும்
படுத்துறங்கள் நன்மைக் கெடுக்கும்-கடுத்தலின்றிக்
கர்த்தனை யெண்ணிக் கடன்செய்ய வேண்டுமெனா
அர்த்தமுறச் சொன்னமுறை ஆய்.

மக்கள் நலத்துக்காய் வாழ்நாள் முழுதுழைத்தப்
பக்குவஞ்சேர் சேசுபுகழ் பாடாயோ-இக்கெனுஞ்சொல்
கொண்டு நெறிவளர்த்த கோமான் இருடியர்க்கும்
விண்டுரைத்தார் வேதமென விள்.

வன்நெஞ்சர் செய்கொடுமை மாணப் பொறுத்துப்பின்
தன்நெஞ் சறைசிலுவைத் தாங்கினரே-கன்நெஞ்சும்
நெக்குறுகி நிற்க நிலைகுலையாத் தேவமகன்
எக்கணத்தும் தீங்கியற்றார் எண்.

அன்பே இறையென்றும் அன்பே மறையென்றும்
அன்பே உயிருக் கரணென்றும்-அன்பே
உயிரென்றும் இந்த உடலென்றும் நீராம்
பயிர்க்கென்றும் சொன்னார் பரிந்து.

கட்டளைகள் ஆக்கிவைத்தார் கன்மவினை நீக்கி வைத்தார்
துட்டமனத் தாரைத் தொடர்பறுத்தார்-இட்டமுடன்
வேத முரைத்தார் விலங்குணர்வைக் கண்டித்தார்
போதக் கிருஸ்துபுகழ் போற்று.

கட்டளையைக் கட்டளையாய்ச் செய்தே உலகோர்க்கு
நட்டமற நல்வழியை நாட்டுவித்தார்-சட்டம்
அறிந்தோர் அறிவார் அறியாதோர் வீணே
எறிந்தே கெடுவார் இசை.

நற்றிருவும் நன்னெறியும் நல்லொழுங்கும் நல்வாழ்வும்
வெற்றியுறு காரியமும் மேவுதற்குப்-பற்றுடனே
தெய்வ யுணர்வில் தினந்தினமும் நன்றுசெயச்
செய்தியுரை ஏசுவழி சேர்.

நல்லார் கிருஸ்து நவின்ற நெறிபலவும்
எல்லா உயிர்க்கும் இனிமையதே-பிள்ளாய்கேள்!
தேவ குமாரன் திருவாக்கு வேதமதால்
மேவிநல மெய்து விரைந்து.

அஞ்ஞானச் சேற்றில் அமிழ்ந்து கிடந்தவரை
மெஞ்ஞான நற்கயிறு கொண்டிழுத்து-எஞ்ஞான்றும்
மோனத் தினிதிருந்து மொய்ம்புடைய வீடுறவே
ஆனவழி செய்கிருஸ்தை ஆய்.

பிள்ளை துடித்தழுகப் பெற்றவள்தான் தூக்காமல்
கொல்லிகொண்டு கண்ணதனிற் குத்துவளோ?நல்லாய்கேள்
ஈசுரனின் தொண்டர் இடும்பையால் நோவுங்கால்
தேசளித்துக் காப்பனிறை செப்பு.

ஊசித் துவாரத்தில் ஒட்டகத்தை ஒச்சிடினும்
தேசுத் திருச்செல்வர் தேயமதில்-ஆசகற்றி
வீடுபே றெய்தல் இயலா ததனாலே
தேடுபொருள் ஈக பிறர்க்கு.

கள்வர்க்கும் கெட்ட கணியர்க்கும் வால்பிடிக்கும்
புல்லர்க்கும் ஏமாற்றுப் பேர்வழிக்கும்-செல்வமதை
அள்ளிக் கொடுக்கும் அறிவிலிகாள் ! நற்பணிக்குச்
சல்லிக்கா சீந்திரோ தான்.

மறுமை நலத்தை மதிக்கின்ற மாந்தர்
கருமித் தனத்தைக் கடிந்தே-அறமறிந்து
ஏழைக் களித்தே இறைவழியிற் செல்கவென
வேளையறிந் தேயுரைத்தார் மேவு.

கர்த்தர் நினைவைக் கருத்தில் இருத்திவிடின்
அர்த்த மறிந்தே அருளடைவீர் - சித்தம்
இதுவே இறைக்கும் ஏசுநா தர்க்கும்
நிதிவேறிங் கில்லை நினை.

என்றன் உயர்வாக்கை ஏளனமாய் எண்ணுவிரேல்
நன்றிங் குமைநெருங்கா நானிலத்தீர் - கண்டுணர்ந்து
தேவ குமாரன்யாள் செப்புமுரை வேதமென
மேவுகவென் றார்கிருஸ்து மேவு.

மண்டலமே காய்ந்தாலும் மாமலைகள் சாய்ந்தாலும்
குன்றனைய கர்த்தனருள் குன்றாதே-கண்டுணர்ந்து
வேதம் படிமின் வினைநீங்க வேண்டிடுமின்
காதவினை யோடுங் கலைந்து.

கூட்டிக் கொடுப்பதையும் கோட்சொல்லி வாழ்வதையும்
காட்டிக் கொடுப்பதையுங் கண்டித்தே-நாட்டவர்க்கு
ஒற்றுமையின் நல்லுயர்வை ஒரும் படிக்குணர்த்திச்
சட்டமது தந்தார் தக.

சாத்தான் நெருங்கிச் சதிகள் புரியுமதால்
பார்த்தே விழித்துப் பரனருளை-நாற்புறத்தும்
சென்றுபணி செய்து சிறப்பை அடையுமென
விண்டுரைத்தார் ஏசுவென விள்.

இங்கே யுரைப்பதுசர் வேசுரனின் வாக்கெனவே
சங்கையுள ஏசையர் சாற்றினரால்-மங்களஞ்சேர்
பெண்ணே! நெறியைப் பிழையின்றித் தான்கற்று
மண்ணில் இருக்க மதி.

செய்தோன் பிழையதனைச் சிந்தித் துணர்ந்தொழுகின்
மெய்யோன் நலங்கள் மிகவளிப்பான்-உய்யவே
பாவமன் னிப்பென்னும் பாங்கை யறிந்தொழுகின்
தேவ நிலையுறலாந் தேர்.

அத்தன் அருள்நலமும் ஆன்மாக்கள் மெய்நலமும்
பத்தி யொழுங்கும் பணிவன்பும்-முத்தி
அருள்சேர் கிருஸ்திங் கமைவுறவே சொல்லி
இருளகற்றி இன்புறுத்தி னார்.

மதவுணர்வை மாற்றி மயக்கநிலை காட்டி
இதநெறியை மாய்ப்பார் இழிஞர்-நிதமினிதாய்க்
கர்த்தனை வேண்டிக் கடமைதனை மிக்கியற்றிப்
பத்திவழி செல்கவென்றார் பார்.

நல்லோர் சபையிருந்து நல்லறிவைப் பேணுவது
எல்லோர்க்கும் நன்றாம் இரும்புவியில்-கல்லார்கள்
மூடரையே நம்பி முழுக்குடிய ராகிமுழு
மூடராய் நிற்பார் முரைத்து.

அன்பு மனத்தில் அருள்ஞான மோங்கவெனில்
என்பும் பிறர்க்குதவ எண்ணிடுமின்-துன்பம்
வரும்போது மஞ்சாது மாதிறமாய் ஈசன்
பெருநெறியே கொண்மின் பெரிது.

மடுத்தபா வாணர் மறையோர் எளியோர்
அடுத்தோர் எகவர்க்குமனத் தன்பாய்க்-கடுத்த
முகமின்றி நன்றே முனிவின்றி ஈதல்
அகத்திற் கினிதாம் அறி.

தம்பட்டந் தட்டித் தமுக்கடித்துக் கூச்சலிட்டுக்
கும்பிட்டு நிற்பார்க்கோர் காசீதல்-வெம்பட்டைச்
சேற்றிலே வீசுஞ் சிறுமைத் தனமதனால்
ஏற்றகை தானறியா தீ.

நோன்பு நெறியை நுகர்ந்த பெரியோர்க்கு
வீம்பில்லை இன்பம் மிகவருமே – தேம்பாவாய்!
உன்னிறையை இன்பாய் உணர விரும்புவையேல்
பண்ணுதவம் காண்பாய் பலன்.

அற்பப் பொருளுக் கலையாதீர் காமத்தின்
அற்ப சுகமதனுக் காடாதீர் - விற்பனமாய்
வேதம் பயில்வீர் விளங்கறிவை ஓங்குவிப்பீர்
நாதவொளி காணமுயல் வீர்.

சேமஞ் சிறக்கத் திருவொளிர இன்பமுறக்
காமங் கொலைகளவு பொய்கடிமின்-நாமத்
திறவுகோல் உங்களிடம் தந்துள்ளான் ஈசன்
கரவின்றி நீர்திறப்பீர் காண்.

நாளைக் கிலையென்று நாசங்கள் செய்யாதீர்
வேளையெல்லாந் தூங்கி விழிக்காதீர்-தேளை
மிதித்துக் கடித்தவுடன் மெய்சோர்ந்து நிற்பீர்
பதித்தறிவு கொண்டுயர்மின் பாங்கு.

தனித்து விழித்துப் பசித்திறையை வேண்டி
மனித்த நிலையுயர்த்தல் மாண்பாம்-கணித்த
கணிப்பதனை மாற்றின் கடவுள் முனிந்து
வினைப்பயனைத் தோற்றுவிப்பான் விள்.

மன்னித் தினிதுதவல் மாந்தர்க் கினியகடன்
முன்னித் திருவகற்றல் மூடர்செயல்-எண்ணிமிகத்
தொண்டுபல செய்து தொடர்பவத்தை நீக்காதார்
மண்டுகளுக் கேதலையாம் மற்று.

நெஞ்சார வாழ்த்திடுவீர் நீள்பகையைத் தீர்த்திடுவீர்
அஞ்சாது தொண்டுபல ஆற்றிடுவீர்-கஞ்சாவுங்
கள்,பீர்,மதுக்குடியை கண்டிப்பாய் நீக்கிடுவீர்
கொல்பகையுஞ் சேர்த்தே குறித்து.

சொல்லைக் சுருக்கென்றும் சோம்பலதை நீக்கென்றும்
சள்ளை தவிர்கென்றும் சால்புடனே-பிள்ளைகளுக்
கன்பை உணர்த்தென்றும் ஆன்றோரை நாடென்றும்
நன்பைப் புரியுமென்றார் நாடு.

நிந்தித்தல் நீதி மறைத்தல் பசியோடு
வந்தவரை யேசி வசைகூறல்-தந்தைதாய்
இம்சித்தல் தாரத்தை ஏசிடுதல்பொய்புகலல்
செம்மையிலா தீச்செயலாம் தேர்.

நோகும் படியெவர்க்கும் நோவதனைச் செய்யாதீர்
சாகும் படிவதைக்கச் சாராதீர்-வேகுங்
கொதிநீரை யார்மேலுங் கொட்டாதீர் கெட்டு
விதிமுந்திச் சாவாதீர் மேல்

கர்த்தனை நம்பிக் கடமை இனிதியற்றி
வித்தகமுங் கைத்தொழிலும் மாண்புடனே-செய்தியற்றி
மிக்கபொருள் சேர்த்து மிகுவறங்கள் செய்திறையை
இக்கணமே யெய்திடுவீர் ஈங்கு.

மக்களுக்கு மாண்புடனே வல்லோன் திருத்தூதர்
பக்குவமாய் ஆய்ந்து பரிந்துரைத்த-தக்கக்
கருத்துநெறி யாவுங் கவின்புவிக்குத் தேவை
பொருத்தமுறக் கற்பீர் புரிந்து.

எச்சரிக்கை என்றே இயம்புந் திருவாக்கு
மெச்சுபுகழ் வாய்ந்த விளம்பல்காண்-இச்சகத்தார்
வாக்கின் நலமறிந்து மாண்பாய் நடக்குவரேல்
தீக்குணங்கள் சேரா திவண்.

கபடச் செயலைக் கடிந்தகற்றென் றின்பாய்
உபநிடதம் போலுரைக ளோதி-நிமிடத்தும்
போதித்து வந்தார் புகழேசு நாதர்பிரான்
ஓதிக்கொள் நன்மை உனக்கு.

குக்கலிடம் ஞானமதைக் கூறேல் குணமில்லா
மக்கள்முன் வேதம் மதித்துரைக்கேல்-திக்கறியா
மூடரிடம் நட்பியற்ற முந்தேல் கொலைபுரியும்
வேடரொடு சேரேல் வினை.

சாமியென வேடமிட்டுச் சந்துபொந்து தான்சுற்றிக்
காமத்தால் நொந்து கலங்குபதும்-யாமத்தும்
பூசை புரிவமெனப் பொய்மொழிகள் கூறுவதும்
வேசைக் குணத்தார் செயல்.

குட்டிச் சுவரதுவும் கோள்கேட்க முந்துவதால்
திட்டிக் குடிகெடுக்கத் தேராதே-முட்டிமுட்டி
வம்பர் கொடுமைசெயின் வாயடக்கிக் கர்த்தரிடம்
நம்பி உரைப்பாய் நலம்.

அஞ்சேல் அடம்பிடிக்கேல் ஆன்றோரைத்துன்புறுத்தேல்
கெஞ்சேல் துறவிகட்குக் கேடுசெயேல்-நஞ்சாங்
கொலைபுரியேல் கள்ளைக் குடிக்கேல் மகளை
விலைபேசேல் எல்லாம் விடம்

வேதத்தை நம்பி விரைந்துபணி செய்யாதான்
நாதத்தைக் காணான் நரங்காணான்-நீதத்தைப்
பற்றிப் பிடித்தார்க்கே பக்கதுணை நல்லிறையைச்
சுற்றி யறிவாய் சுவைத்து.

என்னை உறுதியுடன் இவ்வுலகில் நம்பாதான்
கண்ணை யிழந்து கதறிடுவான்- பெண்ணை!
வருமுன்னர்க் காத்து மகிழ்வுறவே நாளும்
திருவருளை நம்பென்றார் தேர்.

மூடச் செயலை முயங்காது பீடுசெயல்
நாடச் சுகிர்த நலமுறுவீர்-பீடையெலாம்
ஆதவனைக் கண்டகலும் ஆசில் பனியெனவே
வேதனைகள் நீங்கும் விரைந்து.

ஞாயங்கள் பேசி நலிந்தார்க் குதவிடுக
காயங்கள் போற்றிக் களிப்புறுக-தேயங்கள்
தோறும் விரைந்து திருவாக்கின் மெய்ப்பொருளைக்
கூறுங்கள் நன்றென்றார் கூர்ந்து.

பொல்லாங் ககற்றிப் புரைநிலைகள் தானகற்றிக்
கல்லா மடமை கடிதகற்றி-எல்லாரும்
போற்றும் நறும்பணிகள் பொன்றா தினிதியற்றி
ஏற்றமுறச் சொன்னார் இசை.

இரக்க முடையார்பால் ஈசன் இருப்பான்
இரக்க மிலர்பா லிரானே-சிறக்க
நினைக்கின்ற பேர்கள் நியதிநிலை கண்டு
வினைக்கொடுமை தீர்ப்பீர் விரைந்து.

பவத்தை யழித்துப் பவிசாரும் முக்தி
தவத்தால் அடையுமென்றார் சாரும்-அவத்தை
ஒடுக்கத் தவமின்றி ஒன்றுமில்லை கண்டு
நடுக்கறுத்து வாழ்வீர் நலம்.

கடவுள் விதித்த கடமை இயற்றின்
படர்துன்பம் நீங்கிடுமே பாரில்-திடனாய்
நடந்துவா ருங்கள் நலஞ்சார்ந்த இன்பந்
தொடர்ந்தெய்த இன்றே சுகம்.

கண்ணை யிழந்தபின்பு காட்சிநலன் காணலுண்டோ?
என்னை மறந்தபின்பு இன்பமுண்டோ?-மண்ணுலகீர்
தேவ குமாரன்யான் செப்புமுறை வேதமென்றே
மேவியறி வீரென்றார் மேல்

அருளால் அருள்பெற்ற அவனிக்காய் வந்து
மருளை யகற்றி மதியைத்-திருவகையாய்க்
கோடைநிழல் போன்றுக் கொடுத்த கிருஸ்துவைநாம்
பாடையப் பாடிமகிழ் வோம்

அன்பு மனத்தோ டனைத்துயிர்க்கும் நன்றுசெய்து
என்புதோல் போர்த்த நிலையகற்றி-நண்புடனே
பேசிப் பழகிப் பெரிய நலமளித்தச்
சேசுநெறி சாரச் சிறப்பு.

ஈசன் அருளினையும் இன்பமறை யுட்பொருளும்
தேசுடனே கூறித் திருக்கவிதை-ஆசுடனே
பாடவுயர் சக்தி பரிந்தளித்த ஏசுநெறி
நாடியவர் காண்பார் நலம்.

சிரித்த முகத்தோடு செய்யமறை சொல்லி
மரித்தார்க் குயிரளிக்கும் மாண்பர்-வரத்தை
இறையிடமே பெற்ற இயல்புரைத்தார் ஏசு
மறைநாதர் என்றே மதி.

ஏழைக் கிரங்கி இனிதாகக் கொண்டாடி
ஏழைக் கிறையே இறையென்று-மூளைக்குள்
அன்பைச் செலுத்தி அறிவை வகையாக்கித்
துன்பை யறுத்தார் துணிந்து.

உயிரும் உடலும் உயர்தேவன் சொத்தால்
உயிரை வதைக்க நினையேல்-செயிருடனே
உன்னை ஒருவன் அடிக்க உவப்பாயோ
எண்ணி நலனே இயற்று.

ஆடம் பரத்தை அறவே வெறுத்தொதுக்கி
வேடம் புனைவதையும் விட்டொதுக்கி-நாடெல்லாம்
சென்று நிலையாமை தேர்ந்தே நடமினென
நன்றுரைத்த ஏசுவழி நாடு.

அன்பே திருவென்றார் அன்பே உயிரென்றார்
அன்பே அருளென்றார் ஆரமுதாம்-அன்பே
உயிர்காக்கும் மந்திரமென் றோர்ந்திங் குரைத்த
செயிர்தீர் கிருஸ்துநெறி சேர்

வம்பைச் சுருக்கென்றார் மாண்புநெறி சேரென்றார்
பண்பை வளர்த்தல் பவிசென்றார்-நண்பா
பெரியோர் உரைத்ததெல்லாம் பேரிறையின் கூற்றே
அறிவோ டிதனை யறி.

இல்லறத்தைப் பேணி இருந்திடவும் இல்லார்க்கு
நல்லறத்தைச் செய்தே நடந்திடவும்-பிள்ளைக்கும்
நல்லறிவை யூட்டிடவும் நற்றொழுகை செய்திடவும்
வெள்ளமெனச் சொல்கிருஸ்தை மேவு

பெண்ணை மணந்தினிதாய் பிள்ளைகளைப்பெற்றிடவும்
அன்னைக் கினியதொண் டாற்றிடவும்-நன்னலங்கள்
சேர்ந்தே இருந்திடவும் செய்தவங்கள் பேணிடவும்
தேர்ந்தே உரைத்தார் திரு.

மறுமைதனை எண்ணிடுக மாயை யறுக்கத்
திறமைதனைப் பெற்றிடுக தேறிச்-சிறுமைதனைத்
தள்ளி மிதித்திடுக சால்புடைமை பேணிடுக
உள்ளுயர்வு பெற்றிடுக ஓர்ந்து.

வறுமை யகற்றும் வழியை வகையாய்ப்
பெருமையுடன் சொன்னார் பெரிதாய்-நெறியுறவே
வேதத்தைத் தந்தார் விரித்த மொழிதந்தார்
ஆதத்தைக் காட்டி யளந்து.

ஒன்றே இறைவன் உணர்ந்தே தொழுமினென்றார்
நன்றே புரிமினென்றார் நாடிமிகப்-பெண்டுகளே
அன்னை மரியாள் அருந்தவஞ்சேர் தேவமகன்
வெண்ணைய்க்குள் நெய்யனான் மேவு.

பத்துகுண மென்றும் பகுத்தறிவு நன்றென்றும்
நத்திடுதல் மிக்க நலமென்றும்-சித்தாந்தம்
ஆய்ந்திங் குரைத்த அறிவார்ந்த ஏசுவைநீ
தோய்ந்த மனத்தாற் றொழு

மாட்டுத் தொழுவமதில் வந்துதித்த மேலவனை
கேட்டவரந் தந்தருளும் வித்தகனை-நாட்டறிஞர்
எல்லோரும் போற்றுகின்ற ஏசு கிருஸ்துவினை
உள்ளாரக் கும்பிடுவோம் ஓர்ந்து.

தந்தையென நிற்குந் தலைவன் உயர்வதனை
விந்தையுடன் சொல்லி விரிபுவியில்-கந்தைவழி
நீக்கி நெறியை நிலைப்படுத்த தூதர்களில்
பாக்கிவான் ஏசு பணி.

பகைவிரும்பி வாழ்க்கைசெய்யும் பாமரர்கண் டஞ்சா
நகைமுகத்தோ டேயவரை நண்ணி-வகைதொகையாய்
நன்றினிது கூறியிதை நல்வழியில் நாட்டுவித்தல்
வென்றிதரும் செய்கையிதை மேவு

கெட்ட பழக்கம் கெடுதி மிகத்தருமால்
விட்டுவிடஃ தென்றே விரைந்துரைத்தார்-திட்டம்
அறிந்தார் அறிவார் அறநெறியைக் கல்லார்
வரிந்துகட்டி வம்புசெய்வார் மற்று.

துணிந்துநில் நன்மை தொடர்ந்துசெல் அன்பாய்க்
கனிந்தசொல் கூறு களிப்பாய்-முனிந்தே
எவர்பாலும் வெஞ்சினத்தை ஏற்றலே தீதாம்
பவஞ்சூழுங் கண்டு பழகு.

விரலுக்குத் தக்கதுவே வீக்கமது பாடும்
குரலுக்குத் தக்கதுவே கோளாம்-அருளதுதான்
தக்கதுணை யார்க்குமெனத் தத்துவங்கள் சொன்னதெலாம்
மிக்கருள்சேர் நற்கிருஸ்தாம் விள்.

துக்கத்தில் நெஞ்சத் துணிவைப் பெருக்குமென
எக்குலத்தி னோர்க்கு மினிமையுடன்-நற்கரும்பாய்
நீதி உரைத்த நெறியோர் குருபரனைப்
போதமுறப் போற்றிடுவீர் போந்து

ஏசுபிரான் சொன்ன இனிய கருத்துரையை
வாசியுளோர் கற்று வளங்காண்பார்-தோசி
மறுப்பான் மலைப்பான் வழக்கத்தை மாற்றி
வெறுப்பான் இறைநெறியை விள்.

பொல்லாங்கு மேவிப் பொடிந்தழியும் மானிடரை
நல்லாராய் ஆக்கி நலஞ்செய்ய-வல்லோன்
கருணைமிகு தொண்டர்களைக் காசினிக்குத் தந்தான்
மரணபயம் நீக்கிடவும் மற்று.

இறைவா உலகில் இருக்கின்ற பேர்க்கு
நிறைவா யருளிப்பாய் நேராய்-குறையுங்கால்
வம்பு பெருகுமென வாய்விட் டழுததெல்லாம்
எம்பெருமான் ஏசுவின்றி யார்?

ஏசு பிறந்த இனியதிரு நந்நாளில்
வாசந் தடவிவண்ண ஆடைகட்டி-பூசை
அறையை அணுகி அமைதிபுடன் நின்று
முறையாய் வணங்க முயல்.

கண்ணீர் வடித்துக் கருணையுட னேவேண்டித்
தன்னகத்துக் கேற்புடைய தர்மமதைப்-புண்ணியமாய்
இல்லார்க் களித்தே இருக்க இறைநேசர்
எல்லார்க்கு மேயருளு வார்

அன்புக் களஞ்சியமே! ஆருயிரின் காவலனே!
இன்பக் கடலே இசைமணியே!-தெம்பை
அளிக்குந் திருவருளே! அண்ணலே! மக்கள்
விழிக்க வழியருள்வாய் மேல்.

பூசை முறையைப் புனிதமுட னேகற்றுத்
தேசைப் பெருக்கித் தினந்தினமும்-ஆசைதனைத்
துள்ளா தடக்கித் துணிவோடு நோன்பியற்றல்
நல்லார் செயலாம் நட.

மன்னிப்பான் ஈசன் வளருங் கொடும்பவங்கள்
எண்ணித் துதிப்பாய் இனிதாகக்-கண்ணில்
விழுந்தபொருள் நீக்கியபின் வேறுபொருள் வைத்திங்
கழுந்துவையோ? மானிடனே ஆய்

மாதாவே! உன்னை மனமார வேண்டுகிறேன்
தோதாய் எனக்குத் துணைசெய்யே; - ஆதாரம்
உன்னையே! நம்பி உணர்வோ டிவண்வந்தேன்
என்னையே ஆள்வாய் இனிது.

வாழ வழிவகுத்த வள்ளலே என்னுயிரை
ஆள உனையே! அழைக்கின்றேன் - சூழும்
பவத்தை யறுத்துப் பவிசோடென் கூட்டைத்
தவத்தின் வழிசெலுத்தல் சால்பு.

நண்பரென வந்து நகரில் உறைவார்க்குத்
தெம்புரைகள் சொல்லிமிகத் தேற்றியுமே-கண்பார்க்கச்
சித்து நிலையதனைச் சேர்ந்தவர்க்கே யோதுவித்தல்
பத்தர் நெறியாம் பயில்.

வானவரும் வந்து வணங்கும் படியாக
வேணதருள் பெற்றீர் விமலனிடம்-ஞானநிலை
இன்னதெனத் தேர்ந்தோர் இறையென்பார் மற்றவர்கள்
பின்ன முறைப்பார் பெரிது.

ஞான விளக்காம் நலமார் கிருஸ்துவினைக்
கானமுறப் பாடியிரு கையெடுப்பின்-மோன
நிலையெல்லாம் தந்து நெறிக்கு மரசாய்
மலையிருத்தி வைப்பார் மதி.

கலங்கரை நல்விளக்காய்க் காசினியில் தோன்றி
விலங்குணர்வை நீக்குவித்த மேலோன் - களங்கமிலா
மாதவத்தோன் மெய்ஞ்ஞானி வற்றா வருளூற்று
கோதவித்த ஏசுநெறி கொள்

மாட்சிமையாய் நல்லிறையின் மாண்பேஉணர்த்தியிவண்
காட்சியெனத் தோன்றி கடன்செய்த-சூட்சமஞ்சேர்
அன்பே! அருள்விளக்கே! ஆரணஞ்சொல்செவ்வாயோய்
பண்பார் கிருஸ்தொளியே! பார்.

எல்லா நலமும் இறைவன் தருவனெனச்
சொல்ல உரைத்துச் சுருதியிலும் - நல்லுயர்வாய்க்
காட்டுவித்த எங்கள் கருணைத் திருவடிவாம்
ஏற்றமுறு ஏசுவைநீ எண்.

அபய மளிக்க அவனியிலே வந்தார்
செபமதனைச் செய்யின் சிறப்பாய் - உபயம்
அளிப்பார் அணைப்பார் அடியவர்க்கு மேன்மை
அளிப்பார் கிருஸ்தென்பார் ஆய்

எல்லா உயிரும் இறைவன் படைப்பென்றுப்
பொல்லா மனத்துக்குப் போதித்துக் - கல்லாரைத்
தொண்டரென ஆக்கித் துரிசறுத்த மேலவரைக்
கண்டறிதல் மாந்தர் கடன்.

ஒன்றித்து வாழல் உயர்வென்றும் சேயர்களைக்
கண்டித்துப் பேணல் கடனென்றும் - தொண்டுபல
பேணல் நலமென்றும் பேயருரை நீக்கென்றும்
மோனமதாய்ச் சொன்னார் முறை

பக்தி நெறியைப் பவிசோடு தானுரைத்து
முக்திக்குச் செல்ல முறைகாட்டி – வித்தகமாய்
வாழ்ந்தபெரி யோர்கள்தமை வாழ்த்தாத பேரெல்லாம்
தாழ்ந்த நிலையுறுவார் தான்.

பணிந்தார் எவர்க்கும் பவிசோங்கு மென்றே
கனிந்தே உலகோர்க்குக் காட்டி – இனிய
தவமுறையுந் தத்துவமும் தீட்சையதுங் காட்டிப்
பவமறுமி னென்றார் பரிந்து

யோக நிலையும் உயர்ந்தமகா காரணத்தின்
பாக முறையும் பயன்முறையும் - ஆகமங்கட்
கேற்ற முறையோ டினிதிங் கியம்பியவர்
தேற்றமுள ஏசுவெனச் செப்பு.

கேட்டார் மனத்திற் பதியும் படியாக
வேட்ப உரைத்தலது மேன்மையதாம் - தேட்டமுறு
ஏசுமா ணாக்கரிடம் இன்போ டறிவுரைத்துத்
தேசு வளர்த்தார் தெளி.

உண்மைத் தெளிவை உணர்ந்தார் மறைத்தக்கால்
இம்மை மறுமையிலும் என்றென்றும் - நன்மை
இழந்தே சிறகில்லாப் புன்குருகா யேங்கி
விழுந்து விழுந்தழுவார் விள்.

நல்ல மறையை நவிலுகின்ற நாவதனால்
கள்ளை பெருக்குஞ் சதியுரையைப் - பிள்ளாய்
உரைக்காதே என்றேசு நாதர் உரைத்தார்
முரைக்காமற் கேட்க முயல்

வேற்றுமைகள் எண்ணாதே வேதத்தை மூடாதே
ஏற்றோ மெளவுரைத்திங் தேங்காதே – பாட்டியே!
எல்லாம் இறைவன் மயமாய் இருப்பதனால்
பொல்லாச் செயலைப் புதை.

நல்வழியைப் பற்றிடவும் நன்மைபல செய்திடவும்
பல்வழியும் நல்லவராய்ப் பார்த்திடவும் - செல்வியே!
அன்பால் அடியாரை ஆள்புவிக்குத் தந்தனனால்
இன்பாய் அறிந்தே இரு

இருளை விரைந்தகற்றும் ஏற்றமுறு ஜோதி
அருளை இனிதளிக்கு மன்பு - மருளை
விலக்க வினைநலன்கள் மேவும் கிருஸ்த்து
கலக்கமதை நீக்குமகான் காண்

குடித்துக் கணிகையுடன் கூத்தாடி அன்பை
இடித்துப் பகைமையுடன் ஏசி – நடித்தக்கால்
துன்புவரும் வம்புவரும் தோம்புவரும் நாசம்வரும்
கண்குழியும் மண்ணிகழுங் காண்.

ஆசை யடங்கிடவும் ஆசாபா சங்களெனும்
தோச மறுந்துத் தொலைந்நிடவும் - ஏசு
புவியிற் பிறந்து புதியவழி கூறி
அவதிநிலை நீக்கிவைத்தார் ஆய்

ஐயகோ! மக்கள்செயும் அட்டகா சங்களெல்லாம்
மெய்யோ னறிந்தே விரிபுவியில் - மெய்யர்களை
ஆக்கினான் ஆக்கி அழித்தான் கொடுமையின்னும்
ஊக்கமுற வேவளரு தே.

நெறியை வளர்த்திடவே நீள்புவிக்குக் கர்த்தன்
உரியோனை நன்றுயர்ப்பித் திட்டான் - அறிவை
அடைந்தார் அறிவார் அவன்மகிமை மற்றார்
உடைந்தகுட மானார் உணர்

மாதரசி யான மரியாள் மகிமைகண்டோர்
ஏதமின்றி நாளும் இனிமையதாய்ப் - பூதலத்தில்
என்றுஞ் சுகிர்தமுடன் இன்பம் அடைகுவரால்
கண்டு தெளிவீர் கருத்து

தாயே! சரணம்! தலைவனரு ளாலீன்ற
சேயே! சரணம்! தினஞ்சரணம்! – மாயோன்
அருளே! சரணம்! அரனே! சரணம்!
பொருளே! சரணம்! புரி.

மன்னுயிரைத் தன்னுயிராய் மாண்புடனே பேணுபவர்
புண்ணியமே கொள்வார் புகழ்கொள்வார் - கன்னியே!
உன்னால் அடைய முடியுமென வேயெண்ணிப்
பண்ணால் உரைத்தேன் படி.

தேவ குமாரனெனுஞ் சேசுபதம் வேண்டிநின்றார்
தேவ னருகிருந்து சேமமதாய் - மேவியின்பம்
எய்தி மகிழ்ந்திடலாம் ஏற்றமுறு மோட்சகதி
மெய்யதுவாய் எய்திடலாம் மேவு

வந்தார் தமையெல்லாம் மாமகிழ்வாய்த் தானேற்றுத்
தந்தார் நலம்பலவுந் தாட்டிகமாய் - விந்தைமிகு
ஏசுவெனும் செம்மல் இருடிகட்கும் வேதநெறி
தேசுபெறக் கூறிடுவார் செப்பு.

பெத்லகேம் என்னும் பெருமைதிகழ் மாநகரில்
சத்தியஞ்சேர் ஏசுவெனுஞ் சாத்வீகன் - சேசுமகான்
மாட்டுத் தொழுவத்தில் வந்து பிறந்துலகை
ஏற்றமுறச் செய்ததனை எண்.

யோசோப்பு மாமுனிவன் உற்றதவத் தால்மரியாள்
தேசேய்ப்பில் லாதபடி தேவமகன் - சேசுமகான்
மாட்டுத் தொழுவத்தில் வந்து பிறந்துலகை
ஏற்றமுறச் செய்ததனை எண்.

அற்புதங்கள் செய்தார் அபலைகளை வாழ்வித்தார்
விற்பனவி வேகமெல்லாம் மேவிநின்றார் -பொற்பதனின்
நல்லருளால் நோவகற்றி நாட்டோர் மடமகற்றி
உள்ளுயரச் செய்தார் உவந்து.

வேதாந்தம் சித்தாந்தம் மெய்ப்பொருள்சேர்தத்துவங்கள்
போதாந்த ஞானவொளிப் பொன்மறைகள் - நாதாந்தம்
முற்றத் தெளிந்துணர்ந்து மோனத் தவமிருந்து
அட்டசித்தி யாவுமடைந் தார்

தேவன் கருணை செகத்திற் கிடைப்பரிது
தேவ குமாரன் திருத்தவத்தால் - தேவனது
நல்லருளும் பெற்றார் நடுங்கா தொடுங்காது
விள்ளருமா சக்தியும்பெற் றார்.

அப்பத்தைக் கேட்கும் மகனுக் கவன்றந்தை
கற்கொண்டு நீட்டுவனே காண்மினின்றே –பொற்பதனும்
நீர்வேண்டும் இன்பமதை நீடித் தினிதருள்வான்
கார்பொழியும் மேகமெனக் காண்.

யோவா னெனும்பெரிய உண்மைத் தவமுனியால்
தேவாதி தேவமகன் சீர்கிருஸ்து – ஓயாது
மங்களமாய்த் தீட்சைபெற்று வையத் திருளகற்றிப்
பொங்குபுகழ் எய்தியதைப் போற்று.

வேண்டியதைக் கேளுங்கள் மெய்மனத்தோ டேபணிந்து
காண்டகுசீ ரீசன் கருணையுடன் - வேண்டியதை
ஈவான் நலம்பலவும் ஈவான் தெளிமினெனும்
யோவான்மா ணாக்கனுரை யோர்

நற்றவஞ்செய் துள்ளொளியை நாடுங்கள் கண்டடைவீர்
பொற்பனுவல் தேர்ந்திடிலோ பூதலத்தில் - அற்புதமாய்
நல்லறிவைக் கண்டிடுவீர் நாடிமிகத் தேடிடிலோ
கள்ளமின்றிக் கண்டிடுவீர் காண்

உள்ளக் கதவை ஒளிபெறவே வைத்தக்கால்
வெள்ளை மனந்திறந்து மேவுமின்பம் - தொல்லையறப்
பத்திகொண்டு தேவன் பதம்நாடித் தட்டிவிடின்
முத்திக் கதவுதிறக் கும்

விட்ட பயனதனை மேவிப் பிடித்திடவும்
தொட்டகுறை நீங்கத் துதித்திடவும் - இட்டமுடன்
நல்லறங்கள் செய்துபவ நாட்ட மறுத்திடவும்
தொல்லுலகில் மாந்தன்பிறந் தான்

சத்துருவைச் சித்ரவதை தான்செய்து வாட்டாமல்
சித்த முவந்து சிநேகித்து – நித்தநித்தம்
நன்மை பலபேர்க்காய் நாடி இயற்றுவதே
உண்மை உணர்ந்தார் செயல்

நிந்தனை செய்பவரை நேசங் கெடுப்பவரைத்
தொந்தரவு செய்யாமல் தூயமனத் - திந்திரர்போல்
புன்னகைத்து நிந்தித்தார் போக்கதனை மாற்றுவதே
உண்மை மனத்தார் செயல்

நிந்தனை செய்வார்க்கும் நீள்துன்பந் தந்தார்க்கும்
அந்திபக லாய்ப்பகைகொண் டார்ப்பார்க்கும் - சுந்தரஞ்சே
ஈசன் கருணை நிழல்படிக வென்றுநிதம்
பூசனைசெய் தால்வரும்யோ கம்

அள்ளிக் கொடுப்பார்க்கு வல்லவிறை யள்ளியள்ளி
நல்லருளை நாளும் நயந்தளிப்பான் - பிள்ளைகளே!
ஈயாதான் செல்வம் இருளிற் கிடத்திவிடும்
பேயாகு முன்பேணு மின்.

ஈசன் திருநாமம் என்றுந் திருப்பெறுக
வாசப் பரலோகம் வாய்த்திடுக – நேசமொடு
பூமிதனில் வாய்த்திடுக பொன்னுலக வாழ்வென்று
சேமமதாய்த் தோத்திரஞ்செய் வீர்

பொன்னைப் பொருளைப் புவிசேர்த்திங் கென்னபயன்?
அண்ணே! பரலோகம் ஆக்குமினே – கொன்னே
பயனின்றி நல்லுடம்பைப் பாழாக்கின் ஈசன்
தயவின்றித் தானொறுப்பான் சார்ந்து

மீன்வேண்டு மென்கின்ற பிள்ளைக்குப் பாம்பதனைத்
தான்பிடித்துக் காட்டானே தந்தையிவண் -மாண்புடைய
சர்வே சுரனும் தனதடியார் நல்விழைவை
அற்புதமாய்ப் பூர்த்திசெய்வா னாய்

திருமணத்தில் வந்தோர் திராட்சைரசம் இன்றி
இருந்த தறிந்த இயேசு – திருவருளால்
தண்ணீர் திராட்சைரச மாகச்செய் தாரினிதே
உண்ணீர்மை கண்டுவந்தார் ஓர்

சாவின் விளிம்பில் தவித்தபிணி யாளரைத்தன்
நாவின்சொல் லாற்காத்தார் நல்லேசு – மேவிவந்தார்
கண்டார் களித்தார் கருணை இயேசுபதம்
நன்றே பணிந்தார் நவில்

சாவைத் தவிர்த்தார் சகமாயை நீக்குவித்தார்
தீவைத் திருநகரா யாக்கிவைத்தார் - தேவை
அறிந்து நலஞ்செய்தே அன்புகொண்டு யார்க்கும்
பொருந்தப் பணிசெய்தார் போற்று.

செத்த சிறுமிதனைத் தேயத்தோர் கண்டுவக்க
நித்திரைவிட் டேயெழுதல் போலெழும்ப்பி – முத்திநெறி
காட்டி யுலகோர்க்குக் காட்சிதந்த ஏசுபிரான்
போற்றுபதம் போற்றிப் பணி

பாவச் சுமைதாங்கா திங்கலறும் பாமரரே
மேவித் திருவோங்க வந்திடுவீர் - ஆவிநலன்
தந்தே இளைப்பாறும் தண்பதமுந் தந்திடுவேன்
வந்திடுகென் றாரேசு மன்

தந்தைசர் வேசுரனுந் தண்ணழிய தாய்கொடுக்கும்
எந்தப் பொருளும் இனிதாக – உங்களுக்குத்
தந்திடுவேன் ஆதலினால் தாமதிக்கா தின்புடனே
வந்திடுகென் றாரேசு மன்

என்னைத் தொடர எவரும் விரும்புவரேல்
பொன்னைப் பொருளைப் புறந்தள்ளி – இன்னினிதே
பற்றை யொழித்துப் பவிசாக வந்திடுவீர்
இற்றரையோர் கேண்மினென்றார் ஏசு

சாத்தானாம் மாயை தனக்கடிமை யாகாமல்
நேர்த்தியுடன் நேர்வழியில் நின்றிடுவீர் - பார்த்தினிது
சர்வே சுரனும் தகுவாழ்வு தந்திடுவான்
கற்போ லிருக்காதீர் காண்

மக்கள் நலத்துக்காய் மாதுன்பம் யாவையுமே
பக்குவமாய்க் கர்த்தர் பரிந்தேற்றார் - எக்கணமும்
தீமை புரியத் திரியுங் கொடியவர்கள்
சேமங் கெடுத்தாரே தேர்.

பாவம் புரிந்திட்ட பாவியரை மன்னித்தார்
யாவும் அறிந்துயிர்பால் அன்புகொண்டார் - சாவு
வருமுன் ஒளிபெறவே வாழ்த்திநின்ற ஏசு
குருமகான் தேவகுமா ரன்

சாந்தம் பொறுமை தகைமை மிகவுடையார்
மாந்தருள் மாணிக்க மாகிடுவார் - ஏந்துபுகழ்
மேதினியில் இன்னவர்கள் மேன்மை மிகவெய்திச்
சீதமதி போலொளிர்வார் தேர்

நீதி நிலைக்க நெடுபணிசெய் மேலோர்கள்
சோதியருள் பெற்றுச் சுகமுறுவார் - ஏதமது
வந்துற்ற போதினிலும் மாண்பு தவறார்காண்
இந்திரர்போல் இன்புறுவார் எண்

எவ்வுயிர்க்கும் தண்ணழியால் ஏற்ற உதவிசெய்வார்
அவ்வியமில் லாதுயர்ந்தோர் ஆய்மினின்றே – செவ்வியனும்
ஈரமிகு நெஞ்சர்க் கிரங்கிற் றருளுவனால்
தேரநலன் காண்பீர் திரு.

நெஞ்சிற் பரிசுத்தம் நேர்மை நறுங்கடமை
அஞ்சலறச் செய்வார் அவனியிலே – விஞ்சிடவே
தேவன் அருளிற் றிளைத்து மகிழ்வாரே
ஆவதறிந் தேயொழுகு வீர்

போரைத் தவிர்த்துப் புரைப்பகையை நீக்குவித்து
சீரைப் பெருகவைத்துச் செம்மையுடன் - ஊரைமிகக்
கூட்டிச் சமாதானம் கூட்டுவிக்கும் புண்ணியரே
தேட்டமிகு தேவகுமா ரர்

நீதிக்காய்த் துன்புற்றோர் நேர்மைக்காய்ப் பாடுபட்டோர்
ஆதிக்காய்த் தொண்டுசெய்தோர் யாருமிவண் - நீதித்தேர்
ஊரும் பரலோகத் தோடி நடமிடுவார்
சேருமிடஞ் சேரத் திரு

தீர்க்க தரிசிகளை தேயத்தோர் துன்புறுத்தல்
பார்க்கப் புதுமையிலை பைங்கிளியே! – தீக்குணத்தார்
அன்றேநம் தீர்க்க தரிசிகட்கும் ஆணவமாய்
நின்றே கொடுமைசெய்தார் நேர்.

மலைமேல் இருக்கின்ற மாநகரம் பார்க்கும்
த்லையாய் தெரியுமுயர் தன்மை – நிலையறிந்து
குன்றனைய செய்கை குவித்தால் இறையவனும்
கண்டருள்வான் நன்றே கணி.

மீசை தனைவிரும்பின் மெய்யதாய்க் கூழ்குடிக்க
ஆசையது கொள்வ தழகில்லை – நேசம்
புவிப்பொருளில் வைத்திருப்பின் பொன்னுலகம் இல்லை
செவியுடையீர் சிந்திப்பீர் தேர்ந்து

தேவன் அமரும் திருக்கோயில் அன்புள்ளம்
பாவம் தவிர்த்துப் பரமபிதா – கோவில்கொளும்
அன்புள்ள மில்லான் அவன்பால் இறைசேரான்
துன்பகல அன்புகொள்வீர் தேர்ந்து

பொல்லாத சிந்தனையும் பொய்களவு பாதகமும்
நில்லாப் பொருள்விழைவும் நிந்தனையும் - அல்லல்தரும்
காம விகாரம் கணிகைதொடர் பெல்லாமே
தீமைமனத் தின்செயலாம் தேர்

பரலோகத் தந்தை பயில்சித்த மோர்ந்து
கரவா தறம்புரிவோர்க் கென்றும் - இறவாத
இன்பும் அருளும் இனியபர லோகமதும்
நண்பாய்க் கிடைக்கும் நனி.

கர்த்தரை நாடின் கடும்பசிக ளோடிவிடும்
இத்தரையில் தாகம் இரிந்தோடும் - எத்திதியும்
ஐந்தப்பங் கொண்டோரை யாயிரவர்க் கீந்தசெம்மல்
தம்பகத்தை நாடலன்றோ சால்பு.

மற்றார் எதையுனக்கு மாண்புறச்செய் தால்விழைவாய்
கற்றாய் பிறர்க்கதைநீ கண்டியற்று – சற்றேனும்
நீவிரும்பா தொன்றினையும் நீபிறர்க்குச் செய்யாதே
பூவிதனில் நன்றே புரி

தன்னைப் பெரியரெனத் தானெண்ணி மற்றவரைச்
சின்னவரென் றெண்ணல் சிறுமையதாம் - மண்ணுலகில்
யார் பெரியார்? யார் சிறியர்? யாருயர்ந்தோர்?யார்தாழ்ந்தோர்?
சீர்புரிந்து காண்பாய் சிறப்பு

ஊசியதன் வாயதனில் ஒட்டகத்தை ஒச்சிடினும்
தேசுடைய செல்வனவன் தேவனருள் - ஆசுடனே
எய்தல் இயலா திருப்பதனால் செல்வர்களே!
உய்திபெற ஈதல்புரி வீர்.

தீமை அனைத்திற்கும் வித்து பணத்தாசை
சேமம் கெடுத்துத் தெருவலைக்கும் - பூமிதனில்
வஞ்சம் புரியவைக்கும் மாகொலைக்கும் வித்திடுமால்
விஞ்சுபணத் தாசைவிடு மின்

தன்னைத் தியாகித்துத் தாரணியை வாழ்வித்த
கண்ணனைய ஏசுபதம் கண்டுதொழ –முன்னைவினை
நீங்கி நலம்பெருகும் நித்தியமுங் கிட்டிடுமால்
பாங்குபெற வேதொழுவோம் பார்த்து

மரித்தார் எழுந்தார் மரணபயந் தீர்த்தார்
தரித்திரரின் துன்பமதைப் போக்கிச் - சிரித்த
முகத்தோடு யார்க்கும் முனியா தருளைச்
செகத்தருளும் ஏசுபதஞ் சேர்

தாவீதின் ஆட்சி தகுதியுற வேபணியை
மேவிப் புரிய வியனுலகில் - ஆவியுடன்
தோன்றிப் பலவகையின் தொல்லைகளுக் கப்பாலே
ஊன்றினார் நன்மை உலகு.

ஞானநிலை யோகநிலை நன்மைதரும் சித்துநிலை
மோனநிலை பித்துநிலை மோட்சத்தில் - ஆனவிதைக்
கண்டறிந்தோர் காண்பார் கடவுள் பெருநிலையை
மண்டானோர்க் கென்னாம் மதி.

உயிரும் உடலும் உறைந்துவினி தாகப்
பயிராய் வளரும் பலனைத் - தயிருறையும்
வெண்ணையெனக் காண்பார் விளக்குமுளார்,மற்றவர்கள்
வெந்நீராய் நிற்பார் வெறுத்து.

அன்பர் நிலையே அருளுடைய பெட்புநிலை
அன்பர் நிலையே அருபிநிலை – கண்பார்க்க
மாந்தரெனத் தோன்றி மறைவார் பிறந்திடுவார்
சாந்திநிலை யாகச் சகம்

புரியாத மேல்நிலையைப் புண்படவே பேசி
வெறியை அடைய விரும்பேல் - பரியை
அறியாத மீனாய் அகப்பட்டுக் கொள்ளின்
கறியாகி நோவாய் களைத்து.

மதத்தார் மதத்தாரை மாசுபடப் பேசல்
பதத்தை உணராத பாங்கே – விதத்தை
அறிய விரும்பின் அழகுடைய மாதே!
பெரியா ருறவதனைப் பெண்.

எல்லா மறிந்த இறையே உலகமதில்
நல்லாரை யெங்கும் நடப்பித்தான் - இல்லையெனில்
ஏசேது? புத்த இனமேது? யூதரெனும்
பேசேது? கண்டே பிடி.

உள்ள சமயத் துரையெல்லாம் நல்லிறையால்
மெல்ல மிளிர்ந்ததென மேவியறி – பிள்ளாய்!
குரவர் ஒருவரிடம் கும்பலெனக் கற்றால்
இறவாப் பலபுகழே எண்.

ஒளியா லிருளதுதான் ஓடிவிடு மஃதாய்
ஒளிசேர் இயேசின் உழைப்பால் - பழியெல்லாம்
ஓடி மறையுமதால் உத்தமஞ்சேர் மாதேநீ
நாடிப் படித்து நட.

கிருஸ்துடைய சின்னத்தைக் கேளாது மாட்டித்
தரித்திரத்திற் சேர்ந்துவிடத் தாவேல் - மரித்தநிலை
இன்னதெனக் காணார்க் கிவணிற் சிறப்பில்லை
பெண்ணே! பிழையகற்றிப் பேண்.

வேடந் தரித்து வெளிவெளியே சுற்றாது
பாடந் தெரிந்து பவிசுடனே – ஓடும்
உயிர்நிலையைக் கண்டிங் குயர்சேர் தவத்தைப்
பெயர்சிறக்கச் செய்தே பிழை.

கண்டதிரு மாதையெலாம் காமமுடன் நோக்காது
கொண்ட மறையின் குறிப்பறிந்து – நன்றான
அன்பைச் செலுத்தி அழகாய்ப் பழகிடுதல்
பண்பை வளர்க்கும் படி.

மருந்தைக் கொடுத்து மதியை மயக்கேல்
விருந்தை வெறுத்து விலகேல் - அருந்துகின்ற
தண்ணீரை மூடேல் தகுசெயலைத் தானீக்கேல்
மண்ணில் இருக்கும் வரை.

வாழ்வோரைப் பார்த்து மனம்புழுகி வாடாமல்
தாழ்வாய் உழைத்துத் தரமாகி – வீழ்வாரைப்
பின்னிப் பழகிப் பிரிதொன்றை நல்குவது
புண்ணியத்தார் செய்கை புரி

நல்ல மனையை நடுத்தெருவில் விட்டுவிட்டுக்
கள்ளச் சிறுக்கியுடன் கைகோர்த்துப் - பள்ளிசெலாப்
பிள்ளையென ஊர்சுற்றிப் பேரைக் கெடுத்திடுதல்
நல்லார் செயலோ நவில்?

நடக்காத வற்றை நடந்ததாய்க் கூறி
இடக்காய் இடிக்கின்ற பேர்கள் - நடக்கையிலே
சந்தர்ப்பம் பார்த்துத் தகுமான தண்டனையைத்
தந்திரமாய் ஈவான் தலை.

தூதரெல்லாம் வாழ்க! தூரிசகன்ற பேர்வாழ்க!
மாதரெல்லாம் வாழ்க! மறைவாழ்க! – போதமுறு
பாவாழ்க! மண்வாழ்க! பாவலரோ டேமறையோர்
நாவாழ்க! தேவனரு ளால்.

வேரும் விழுதும் வெவ்வேறாமே குருவுரை அதுதிருவுரை

## என்னுரை

பழம்பெரும் பண்டிதர்கள் பக்தியின் பரவசத்தால் அந்தப் பரமனைத் துதித்தும் அவனது பண்புக்குரிய பக்தர்களைத் துதித்தும் பல அந்தாதி பாடியும் நமது பைந்தமிழ் மொழிக்கு அணி செய்திருக்கின்றனர்.

அவ்வரிசையில் அடியேனும்ஏதோஒரு துணிவில் இந்நூலைப் படைக்கின்றேன். பிழைகள் இருப்பது சகசமே! மன்னித்தருள்க.

இந்நூல் இந்நிலையை அடைய எல்லாவகையிலும் உதவிய அந்தப் பரம்பொருளுக்கு எனது வணக்கம்.

இந்நூல் அச்சு வாகனம் ஏறி-இறங்க உதவி செய்த குருமார்கள் நண்பர்கள் அன்பர்கள் அச்சகத்தார் ஆகிய அனைவர்க்கும் சாற்றுக்கவிதை தந்துதவிய நண்பர்கட்கும் எனது அன்பு கலந்த நன்றி.

**நீ அதுவானால் அதுவாவாய்**
**அதுவே பேசும்**

**நாச்சிக்குளத்தார்**

# வாழ்க்கைக் குறிப்பு

தாயார் ஆமினம்மாள். தகப்பனார் முகம்மதுமைதீன் மனைவி ஒன்று குழந்தைகள் ஐந்து (பெண் 3 ஆண் 2) பிறப்பு - 1934 – பிறந்த ஊர் (இருப்பு) நாச்சிக்குளம், கல்வி – புதுமுக வகுப்பு (நான்காண்டுகள்) தொழில் மாடு (ஆடு) மேய்த்தல் மீன் (கருவாடு) விற்றல் - பிடித்தல் கூலி வேலை நிகழ்காலம் - தொழில் கூடப்பிறப்பு இரண்டு அண்ணன்மார் (அவர்கள் படிக்கவில்லை) ஆசீர்வதித்தவர்கள் (குருமார்கள்) சதாசிவ அடிகள் (பின்னத்தூர்). பெருமழைப்புலவர் தவத்திரு சுவாமி-இராமதாஸர் சுவாமி சுத்தானந்த பாரதியார்-எழுதிய நூல்களில் அச்சானவை முப்பது, அச்சாகவேண்டியவை இருபது, பிறர் நூல் அச்சிட்டது சீறாப்புராணம் - இராஜநாயகம்: சுப்பிரமணியர் பதிகம் -இன்னிசைப் பாமாலை இன்னும் பல. கம்பர் - நபிகள் - பிள்ளைத்தமிழ் நூல்கள், எண்ணம் - சமயத்துக்கும் - சமுதாயத்துக்கும் தொண்டு புரிதல் கொள்கை – பொதுநிலை, பேணல் சன்மார்க்கும் - (இஸ்லாம்) நம்பிக்கை – வேதம் - அனுபவம்: இன்பமும் - துன்பமும், துணை – முத்தொழில் புரிவோன் நடந்தவை இது – நடப்பவை பின்பு.

கேட்டல் உன் கடன் - காட்டல் அவன் கடன்.
குறிப்பு - இது காறும் எனக்கு யாரும் எந்த அதிகாரத்தையும் சொல்லிக் கொடுத்தவரில்லை. எல்லாம் வினைப்பயனே.

## சாற்றுக்கவிதை

ஒன்றாகிப் பலவாகி, இயற்கை என்னும்
உருவாகி, உயிராகி, எல்லா மாகி,
நின்றாடும் ஆண்டவனின் தூத ராகி
நிலைத்தநபி திருப்புகழை ஓதி ஓதி
மன்றாடி அருள்வேண்டி, ஞான மென்னும்
மார்க்கநெறி தனைத்தேடி ஓங்கி நிற்கும்
குன்றான கவிச்சிங்கம்: கோதி லாத
குணங்குடிவாழ் மஸ்த்தானை ஆய்தல் நன்றே!

உள்ளமெனும் தடம்நிறையப் பொங்கிப் பாயும்
உயர்அருவி தனைவெல்லும் உயர்ந்த பாடல்
வெள்ளமெனத் தந்துவகோர் வியந்து போற்ற
வேதநெறி கூறுகின்ற சொற்கள் கோடி
அள்ளிவரும் கவியமுதை அளிக்கும் நண்பர்:
அணிநாச்சி குளத்தாராம் அமுத ஊற்றில்
துள்ளிவரும் கவிமூழ்கித் துதர் காட்டும்
துய்யநெறி வழிவாழ்க! துலங்கி வாழ்க!

**மாவித்வான் (எ) மீனாட்சிசுந்தரம்,**
**மீனவன்**
**காரைக்குடி.**

## சாற்றுக்கவிதை

பந்தமுடன் பாசமது கொண்டிட் டாலும்
பாராளும் ஆசையெலாம் வந்திட் டாலும்
சொந்தமெனப் பொருள்பலவும் சேர்த்திட் டாலும்
சொக்கட்டான் வாழ்க்கையதை யறியார் யாரே!
அந்தமென ஓர்நாளில் அந்த கன்தான்
அழைக்கின்ற போதந்தோ! அந்தோ! என்று
விந்தமலை வீழ்வதுபோல் வீணாய்க் கத்தி
வேடிக்கை மனிதனென வீழா மைக்கே,

அந்தாதி இல்லாத ஆண்ட வர்க்கோர்
அந்தாதி தான்படி ஆன்மா வுய்ய,
சிந்தாதி நூல்களெலாம் சிறந்து பாடும்
சிறப்பான நற்கவிஞர் சீறா வைப்போல்
நந்தாத நூல்செய்யும் நல்லூழ் பெற்ற
நாச்சிகுளக் கவியரசர் நவின்ற இந்த
சிந்தாத மணிவிளக்காம் தெய்வீ கத்தின்
சீர்மிகுந்த அந்தாதி வாழி! வாழி!

நாகூரும் மெக்காவும் புனித மென்றால்
நாச்சிகுளக் கவிசெய்த நல்லந் தாதி
போகூழால் உயிர்தம்மை யண்டு கின்ற
பொல்லாங்கை யெல்லாமே பொடியாய்ச் செய்யும்
ஆகூழால் வினைத்திட்ட புனிதம் என்பேன்!
அன்பான முகமதியர் அல்லா தோர்க்கும்
மாகூழால் விளைந்திட்ட உணவைப் போல
மனமாரப் போற்றிமிக வாழ்க! என்பேன்.

**புலவர். தெ.முருகசாமி M.A., B.O.L.,**
**முதல்வர்**
**இராமசாமி தமிழ்க் கல்லூரி**
**காரைக்குடி.**

# தெய்வீக அந்தாதி
## (கட்டளைக் கலித்துறை)
### காப்பு

ஆதி இறைவன் மேல் அந்தாதி பாட அடியனுக்குச்
சோதி யருளைத் தரவேண்டி: வந்து சுருதிகளை
ஓதி யமர்ந்தேன் உளத்துள்ள ஞான ஒளிச்சுடரே!
நீதி நிலைக்க நெறியோடு சக்தி நிதமருளே.

### நூல்

பாடவைத் தாயென்னைப் பாடத் துவங்கினேன் பக்தியினால்
ஆடவைத் தாயென்னை ஆடத் துவங்கினேன் அன்பர்பதம்
நாடவைத் தாயென்னை நாடத் துவங்கினேன் நல்லுறவு
கூடவைத் தாயென்னைக் கூடத் துவங்கினேன் கூட்டிக் கொள்ளே. 1

கூட்டிக்கொண் டென்னைக் குணத்தார்பாற் சேர்த்துக்குணங்குடிக்கே
மாட்டிக்கொண் டென்னைநன் மன்றத்தில் வைத்து மறைநெறியை
நாட்டுக்குக் கூற நயமான ஞானம் நயந்துரைத்துப்
பாட்டுக்குள் நிற்கும் பரம்பொருளே! என்னைப் பார்க்குவையே. 2

பார்க்குங்கா லின்பம் பவிசாமுன் பார்வை படாதிருப்பின்
சீக்குக்குள் பட்ட திருமேனி போலச் சிறப்பிழந்து
வாக்காலுங் கொண்ட செயலாலும் தீதில்வளைந்துநின்று
போக்காலும் மாறிப் புரையாலே நொந்து பொடிகுவனே 3

பொடியாகி மாளல் புகழாமோ? என்னைப் புரிந்து கொண்டோய்
அடியாரிற் சேர்த்தே யறிவீந்து நல்ல அணங்கினொடும்
குடியாக வாழ்க்கைக் குறிப்போடு பேணக் குறிப்பளித்து,
பிடியாக நல்ல பெயர்வாங்க நெஞ்சிற் பிரியம்வையே! 4

வையாது மண்ணில் வளர்த்தக்கால் என்றன்மனமதுதான்
செய்யாத தெல்லாந் தினஞ்செய்தே என்றுஞ் சிதைந்திடுமால்
ஐயா ! நீ என்னை அரணோடு பேணி அரியசெயல்
மெய்யாகச் செய்ய வளமீந்து காக்க விரும்பிவிடே. 5

விரும்புங்கால் எல்லாம் விதியாக மாறி விரிந்தநலன்
கரும்பாக வந்து களிப்பீந்து காக்கக் கருதுவையே
அரும்பாக வுள்ள அழகான பூவின் அரியமணம்
நிரம்பவே வைத்த நிமலாவுன் பக்கல் நிறுத்துவையே. 6

நிறுத்தி மறைசொன்ன நீதிதேர்ந் தேபணி நித்தநித்தம்
பருத்தி புடவையாய்க் காய்த்திட்ட வாறாய்ப் பதியதனிற்
பொருத்த முடனே புலமையாற் செய்தல் புகழுதன்றோ
வருத்தம் இருப்பினும் மன்னித்துத் தேற வரமருளே. 7

வரமின்றி இந்தப் புவியுண்டோ? கானும் வளங்களுண்டோ?
தரமின்றிப் பூத வகையெல்லாம் நந்நலம் தந்திடுமோ?
சிரமின்றி யுன்னைத் தரிசிக்க என்ன சிறப்பதுவோ?
உரமின்றி நன்செய் உதவாது கண்டே உயர்த்துமப்பா? 8

அப்பாவும் நீயே! அனுதினங் காத்தே அரியபலன்
எப்போதுஞ் செய்தே இருப்பதுடன்: தாயாய் இலங்கிநிதம்
ஒப்பப் பெருந்துணை ஓயாது செய்தே உரியநலன்
தப்பாது தந்தாள் தயாபரா! காப்புன்றன் தாளடியே! 9

தாள்போற்றி வந்த தமிழன்பர் மிக்க தகுதிபெற்று
நாள்போற்றி நல்லருள் நாயன்மா ராகி நனிசிறப்பை
மால்போற்றிப் பெற்று மறையாகி மண்ணில் மதித்தவர்பாற்
சால்போடு சொர்க்கத் திருவடைந் தாரி.்.து சத்தியமே. 10

சத்திய மார்க்கம் சகத்தோர்கள் பேணத் தவமுனிவர்
பத்திய தோடு பவமறச் சேவை பரிவுடனே
சித்திய தாகச் சிறப்போடு செய்த சிறப்பதனால்
நித்திய வாழ்வு நினைவோடு தந்தாய்! நினைத்தனனே! 11

நினைத்ததால் இந்த நிலத்தோர்க்கு நேர்மைகுறளதாச்சு
நினைத்ததால் இந்த நிலத்தோர்க்கு ஞான மறையதாச்சு
நினைத்ததால் இந்த நிலத்தோர்க்கு வாழும் நெறியதாச்சு
நினைத்ததால் இந்த நிலத்தோர்க்குத் தெய்வநினைவதாச்சே. 12

ஆச்சரி வாச்சுப் பகையாச்சு மிக்க அவலமதாய்
சீச்சீச்சி எல்லாம் சிதைவாச்சுக் காணச் சிதைவதாச்சு
காட்சி யறிந்துமே காணாத வாறாய்க் களைக்கவிட்டுச்
சூட்சி புரிகிறா யி·து சுருதிக்குச் சோபனமோ? 13

சோபனம் போனால் சுகமாமோ? விண்ட சுருதியெல்லாம்
சாபத்தால் வீணே பிழையாகித் தீதாருஞ் சங்கடத்தைக்
கோபத்தால் தந்து குறையாக்கித் துன்பைக் குவித்திடுமால்
ஆபத்தைத் தீர்க்க அடியேனும் வேண்டி யணுகினனே! 14

அணுகின தெல்லாம் அருமையாய் நல்ல அழகடைந்து
புனுகென மிக்க புகழாகித் தெய்வப் புரட்சியிலே
மனிதர்கள் சேர்ந்து மரபொடு வாழ்ந்து மயக்கமின்றி
இனிதுயர் இன்பங்கள் எந்நாளு மெய்த இறங்குவையே 15

இறங்கினா லன்றோ! சகமெல்லாம் மிக்க இதமடைந்து
பறங்கி படர்கின்ற பான்மைபோல் வாழ்வுயர் பக்குவமாய்
நிறங்கூடி நல்ல நிலைகூடி ஞான நெறியினிலே
வரந்தேடி மோட்ச வழிதேடிச் சீவன்கள் வாழ்ந்திடுமே. 16

வாழ்ந்தாரின் கூற்றை வகையோடு கண்டுவளமடையின்
சூழ்ந்துள்ள துன்பச் சுமையெல்லாம் தீர்த்து சுகமுடனே
தாழ்ந்துள்ள மக்கள் தமைக்காத்து ஞானத் தமிழினிலே
ஆழ்ந்துள்ள பேர்க்கா யறிவீயக் காவல் அமையுமன்றோ 17

மன்றத்தில் நின்று மணக்கின்ற பெண்ணில் மதியிழந்து
தண்டத்தை ஏற்கப் பணங்கேட்டு மிக்க தரித்திரத்தை
முண்டொத்த ஆண்கள் முறையின்றிக் கேட்டு முடிக்கிறார்காண்
கண்டிக்க நீயுங் கருதாது நிற்கக் கருதுவதோ? 18

கருதிநீ தந்த கணக்கான வேதக் கருத்துரைகள்
உறுதிய தற்றே கலகலத் தாடின் உலகமென்றும்
மறதிய தின்றி மறைக்கேற்ப மக்கள் மகிழ்வடையப்
பிரதிய தாகப் பெரியாரைப் பேணிப் படைக்குவையே. 19

படைக்கப் படைக்கப் பவந்தேடி மக்கள் பகையதனைக்
கிடைக்கக் கிடைக்க மிகுவாகத் தேடியே கீழ்செயலால்
நடக்கும் பிணமாய் நலிவேற்று மண்ணில் நடக்கிறார்காண்
மடக்கும் படியாய் மனமீந்து நெறியில் மாற்றுவையே. 20

மாற்றிப் பிறவி மகத்துவ மாக்கி மனத்துயரைக்
கூட்டிப் பிரித்துக் குதூகல மாக்கிக் குவலயத்தைப்
போற்றிப் புகழ்ந்து புதிதாக்கி நல்ல புதுவுலகை
ஏற்றுப் பெறவே இதமாகும் இஃதில் இறங்கிவிடே. 21

இறங்காது நின்றால் எளியவர் வாழ்க்கை இதமுறுமோ?
உறங்காது வாழின் உடலது சேவைக் குதவிடுமோ?
அறங்காத் தருண கிரிகாத்துப் பாடல் அமைக்க வைத்தோய்
தரங்காத்து நாளைத் தமிழ்வாழ ஞானந் தளிரச்செய்யே.22

செய்யாது வாழ்வு சிறப்பாமோ? ஓதுஞ் சிறுவர்களை
வையாது கல்வி வரவைத்தால் ஞானம்வலுவுடைத்தோ?
தையாது சட்டை தரமாமோ? மேகம் தரணியிலே
பெய்யாது போயின் மனுவென்னாம்? தோன்றும் நோய்
போக்குவையே 23

போக்கி நலனைப் புதிதாகத் தந்தாற் புவியதனில்
ஆக்கும் பணிகள் அழகாகும்: இஃதை யறிந்திருந்தும்
ஊக்க மளிக்காது வேறாய் விலகுங்கால் ஓங்குபுகழ்
ஏக்க மடைந்தே இடிசேர்ந்த தோப்பாம் இரக்கங்காட்டே 24

காட்டும் அருளால் வறுமைப் பிணிகள் கரைந்தின்பத்தை
ஊட்டும் படியாய் உலகெல்லாம் சேவை உயர்வதுற்றுப்
பாட்டுங் கவியும் பவிசோடு நாட்டிற் பயனடைந்து
நீட்டுங் கரத்தில் நிலையான வெற்றி நிறையவையே. 25

நிறையாத அன்பின் நிலையென்ன நெஞ்சில்நெறிகளெல்லாம்
குறையாகித் தீதைக் குவித்தக்கால் குறிப்பில் குறைகளன்றோ
முறையாகி வேத நெறியோடு தொண்டை முயன்றியற்றி
இறையோடு சீவன் நலமொன்ற மோட்சத் திறக்குவையே. 26

இறக்க உனக்குத் துயரற்றுப் போகும், இனியவற்றை
மறக்க உனக்கு மயக்கம் வருந்தடு மாற்றமன்றோ
துறக்க நினைப்பார்க்குத் தோள்தந்து காத்ததுய்யவனே!
பிறக்க நினைப்பாரைப் பீடுறக் காப்பதுன் பெற்றியதே. 27

பெற்றி யடையப் பிறந்துவாழ் வோரால் பிணியதுதான்
ஒட்டி வருத்தியே ஓடாக்கி நெஞ்சின் உழைச்சலிலே
தட்டித் தடுமாற்ற முற்றுகீ ழாக்கியே தள்ளியந்தோ
முட்டுப்பாடாக்கி முறைபோக்கி வம்பதாய் மோதிடுமே. 28

மோதித் திரிய முறையாமோ? வேத முகம்மதுசொல்
ஓதித் திரிய உயர்வெல்லாம் வந்தே உறைந்திடுமால்
பீதி யடையப் பிழையாகும், இன்றே பிரியமுடன்
நீதி யரிந்து நினைப்போடு வாழ்வில் நெருங்கிவிடே. 29

நெருங்க நெருங்க உறவெல்லாம் வந்து நிதமுதவும்
சுருங்கச் சுருங்கச் சுவையாமோ? வாழ்வைச் வைத்தவர்கள்
வரங்கேட்டு நிற்க வளமார் பொருள்தான் வளர்ந்துவிடின்
தரங்கேட்டு நிற்பார் தமிழை யறிந்த தலைவர்களே. 30

தலைவர் சரியில்லை என்பதால் இன்று தரணியிலே
கலைகள் சரியில்லை காதல் சரியில்லை கண்டகண்ட
விலைகள் சரியில்லை வேலை சரியில்லை வேண்டிநிற்கும்
நிலைகள் சரியில்லை நேரஞ் சரியில்லை நீகாணையா. 31

காண நலமாகும்: காணாது செய்யும் கடமையெல்லாம்
ஈன நிலையில் இடராகும்: இஃதை எவரறிந்தார்
ஞான நிலையேதான் நன்றுக்காய் வாழ்ந்த நபிகளெல்லாம்
வேணக் கொடுத்தார் விழுப்பொருள் கற்று விளங்கிடே. 32

விளங்க உலகில் விசனங்க ளெல்லாம் விலகிடுமே
கலங்கள் பருகக் கருதுதல் நல்ல கருத்ததுவோ?
தலங்கள் மிகுந்த தமிழ்நாட்டில் பொய்யைத் தமிழரெல்லாம்
மலங்கியே பேணி மகிழ்கின்றார், என்ன மகத்துவமோ? 33

மகத்துவங் கண்டு மனிதர் உறவை மதித்துநிற்பின்
சகத்திலே யார்க்குஞ் சலியாத வெற்றிகள் சார்ந்திடுமே
அகத்திலே அன்பு துளிராது வஞ்சம் அமர்ந்துவிட்டால்
நகத்திலே சேர்ந்த அழுக்காக நன்மை நலிந்திடுமே. 34

நலிந்தக்கால் எந்தநந் நாட்டாரும் தேசத்தை நன்றிகழ்வார்
துளிர்த்தக்கால் பார்த்துத் தொலைதூர மன்னருந்தொட்டுநிற்பார்
அழிந்தக்காற் செய்த அறமும் மறுமைக் கணியதாமோ?
பிழிந்த கருப்பஞ்சா றாகிப் பிழைபோக்கிப் பேறடையே. 35

பேறடைந் திங்கே பெருஞ்சிறப் பேற்றுப் பிரியமுடன்
ஊரடைந் தாலே உவப்போடு சொர்க்கத் துறுபுகழை
நேரடைந் தென்றும் நிலையான வாழ்வில் நிரந்தரமாய்
சீரடைந் தென்றும் சிறப்போடு வாழ்வாய் செயமதன்றோ. 36

செயத்தை யடையச் செகத்திற் பலபேர் சிறந்ததவம்
பயத்தை உணராது பண்ணியே நல்ல பயனடைந்தார்
நயத்தைப் புவிமாந்தர் நாடாது வாழ்ந்தே நகையதனாற்
புயத்தை இழந்தவ னாகி மடிந்து புரையானாரே! 37

புரையாகி வாழும் புலைஞரால் இந்தப் புவியதனில்
இறையாகி நிற்கும் எஜமானின் நேசம் இனிதருளே
துறையான தெய்வத் துணைதேடி நாளுந் தொழுதிறைஞ்சி
வெறியான தோட்டி மிகுதர்மம் சேர்க்க விரும்பிவிடே. 38

விருப்ப முடனே விருந்திய அன்பு விளைந்துவிடும்
மறுப்ப ததனால் மனமாற்ற மாகும், மறுமைதன்னிற்
பொறுப்ப தடைந்து புகழோடு சொர்க்கம் புகுவதற்குச்
சிறப்புள தோர்ந்து திருப்பணி செய்து சிறந்துவிடே. 39

சிறந்து வளரச் சிரிக்கின்ற பேரைத் தெரிந்துவிடும்
மறந்து நடக்க வசையாகும்: இந்த வளைபுயில்
துறந்து நடந்தார் துணிவென்ன ? அன்னார் துயரைவிட்டுப்
பிறந்த பயனைப் பிடித்தின்ப மெய்துநற் பேரானாரே. 40

பேராகி வாழ்ந்த பெரியாரை எண்ணிப் பிரியமுடன்
சீராகி நல்ல சிறப்பாகி வாழ்விற் றிருவணிந்து
நேராக இந்த நிலத்திற் செயமார் நெறியுரைத்துக்
தாராக மாறிக் கலைஞானி போலக் கதியடையே. 41

கதியடைந் தார்காந்தி காணப் புவியிற் கலைப்பயனால்
நிதியடைந் தார்நேரு எண்ணுங்கா லிங்கே நிதானமின்றிச்
சதியடைந் தார்துன்பச் சாக்கடை சேர்ந்து சலிப்படைந்தார்
மதியடைந் தாரண்ணா! மாண்புறும் ஞான மறைவானாரே42

ஆன அறிவை அமைப்போடு பெற்ற அறிஞரெல்லாம்
ஞான அறிவை நலமோடு தேர்ந்து நனிசிறந்து
மானப் புகழை மதிப்போடு பெற்று மகிழ்வுடனே
காணச் சிறப்படைந் தார்கண்டு வாழக் கருதுவையே. 43

கருதிப் படிக்கக் கருதாத பிள்ளை கதியுறுமோ?
உறுதி யடையா துழைப்பார்க்கிங் குண்டோ உறுதுணைகள்
மறதி யடைய மயக்கமே தோன்றும் மதித்துணர்ந்து
சுருதி வழியிற் றொடர்சேவை செய்துச் சுகமடையே. 44

அடைந்த பிறவி அரிதாகு மென்றே யறிந்தவர்கள்
கடைந்தபால் வெண்ணெய்க் கதியீயும் வண்ணம் கடவுளடி
நடந்து வழிபட்டுப் பேரின்ப வாழ்வை நயந்தடைந்தே
உடைந்துவீழ் யாக்கை உணர்ஞானி வாழ்வில் உயர்ந்தனரே 45

உயர்ந்த பணியே உயர்வாக்கம் நல்கும்:உணர்ந்துகொளும்
பயந்த பணியே பழிபாவம் நல்கும்: படித்தறியும்
நயந்துசொல் வார்த்தை நலனீந்து வேறாய் நடக்கவைத்தே
அயர்ந்த நிலையை அகற்றியே காக்கும் அறிவாயப்பா! 46

அப்பா! நின் தாளடி அண்டிப் பணிகின்ற அன்பர்களை
அப்பா! நீ யாண்டே யறிவீந்து காக்க அடிபணிந்தேன்
எப்போதும் வேண்டிப் பனுவல் இயற்றி இசைக்குமென்சொல்
தப்பாது கேட்டுத் தகைவாகக் காப்பாய் தனித்தவனே! 47

தனித்த தமிழால் தரமான சொற்கள் சமைந்திடுமோ?
இனித்த பதத்தை எழுதிப் படிக்க எழுத்திணைந்தால்
கணித்த நிலையைப் புகலலாம் அஃ.து கனியதன்றோ
பணித்த கருத்தைப் பதறாமல் கேட்டுப் படைக்குவையே!48

படைக்கின்ற ஈசா! பவமான மாந்தரைப் பாரதனில்
உடைக்கின்ற வாறாய் உறுபகை செய்ய உறைகிறார்காண்
நடக்கின்ற வற்றைநீ நாளுங் குறைத்து நலமதுதான்
நடக்கின்ற வாறாய் நனிதாற்ற வேண்டி நடித்தனனே! 49

நடித்துப் புவியில் நலமான வற்றை நவிலாவண்ணம்
இடித்துப் பழகும் இழிவான காம இயல்பதனைத்
துடித்துக் குறிப்பாத் துயர்சேர நாளும் தொடர்கிறார்காண்
அடித்து நெறியை அகமேற்றிவைக்க அறைந்தனனே! 50

அறைந்த படியாய் அறிவோதி நிற்கும் அறிஞர்களை
இறைந்த படியாய் இருக்கின்ற செல்வர் இடிக்கிறார்காண்
மறைந்த நபிமார் மகிழ்வோடு வாழ மறுமையிலே
நிறைந்த பயனை நினைவாகச் செய்தோய்! நிதங்காத்தாளே.51

காத்த இறையே! கடைசி வரைக்கும் கடமைகளைக்
காத்து நலமாய்க் கருத்தோடு செய்யக் தருத்தமுதம்
சேர்த்துத் தினமும் சிறப்பாகத் தந்து செயமதனைப்
பார்த்து மகிழப் பவிசான நல்லருள் பண்ணுவையே. 52

பண்ணி முடித்த பழமான பாடல் பதிப்பித்தேதான்
மண்ணி லிருப்போர் மகிழ்வோடு கற்க மனமுவந்தே
நண்ணிக் கொடுக்க நலமான வாய்ப்பை நமன்வந்தேதான்
எண்ணிப் பிடித்தே இழுக்குமுன் தந்தாள் இனியவனே. 53

இனிது புவியில் இருக்கின்ற போதே இறைஞ்சிடலும்
இனிது புவியில் இருக்கின்ற போதே இணங்கிடலும்
இனிது புவியில் இருக்கின்ற போதே இனியபெயர்
புனித முடனே புலவர் புகழப் புனைந்தருளே! 54

புனைந்த கவியைப் புவியோர் படிக்கப் புகவில்லையே
இணைந்த மனையை இதமோடு பேணி இனியபலன்
கனிந்த படியாகக் காணாது புல்லர் கயமையினை
அணிந்த படியே அலைகின்றார் இ∴தோர் அறிவதுவோ? 55

அறிவார் அறிவால் அழகான தொண்டை யலைந்தியற்றிப்
பெறுவார் பெரியோர் அருளாற் பெரிய புகழ்நலங்கள்
வருவார் தெரிவார் மகிழ்வா ரதனை மறுபதிப்பாய்த்
தருவார்: தரவே தமிழ்நல மோங்கும் தடத்தினிலே. 56

தடத்தை யறிந்தார் தமிழ்காத்து நிற்பார் சனித்திருந்த
இடத்தை யறிந்தார் இதமோடு காப்பார் இறையிருக்கும்
மடத்தை யறிந்ததார் மகிழ்வோடு பேணி மறுமையிலே
சடத்தை அவிழ்த்துச் சரக்கோடு காண்பார் தனியிடமே. 57

தனியென்று சொன்ன தவசியின் கூற்றைத் தனித்திருந்து
பிணியென்று சொன்னதீ மாயைப் பிரித்துப் பெரும்புகழை
மணியென்று சொன்ன மறைஞானக் கூற்றின் வழக்கதனால்
நனியென்று கண்டு நலமோடு வாழ்வார் நபியிடத்தே. 58

இடத்தை மறந்து வணங்கும் வணக்கம் இசைபெறுமோ?
நடத்தை தவறின் நலமான ஆனந்தம் நண்ணிடுமோ?
கடத்தைக் கொடுக்காது கைமாற்று வாங்கிக் கருதிவெறும்
படத்தைத் தினந்தினம் பார்க்கின்ற புன்செயல் பாவமன்றோ 59

பவத்தை யடைந்தாற் பலதுன்ப மாகும் பணிந்துவிடே
தவத்தை யடைந்தால் தவஞான மோட்சம் தகுதியன்றோ
சிவத்தை யறிந்து திருவார் குருவின் சிறப்பறிந்தே
அவத்தை யடைந்தே அழகான லோகம் அமர்ந்துவிடே. 60

அமர்ந்து தினமும் அழகு கவியை யமைப்பதெல்லாம்
சுமந்து கிடக்கின்ற சோதனை பாவும் சுருங்கவன்றோ
நிமிர்ந்து நடக்க நெறியாஞ் சுடரை நிமிர்ந்துபிடி
அமர்ந்த படியே அருளும் இறைநலம் ஆய்ந்துகாணே. 61

காணே! எனைநீ கவரா திருந்தால் கருத்ததென்னாம்?
மானே! மதியே! மணிசேர்ந்த துய்ய மரகதமே!
கோனே! குருவே! குறைதீர்க்கும் இன்னிசைக் கோமளமே!
தேனே! திருவே! தெவிட்டாத முக்கனித் தீஞ்சுவையே! 62

சுவையில்லா தாயின் சுவைத்துண்ண வேகனி சுற்றுவரோ?
அவையில்லா தாயின் அருந்தமிழ் நந்நலம்ஆய்வதெங்ஙன்?
நவையில்லாச் செய்யுள் நயந்துசொற் றாலுமென்?நன்மையுண்டோ
துவையில்லாக் கஞ்சி குடிக்கச் சுவையாமோ? சுந்தரனே!63

சுந்தரத் தீந்தமிழ் தோள்தட்டிக் காக்கவோர்சோதனையோ?
வந்தவ ரெல்லாம் வளமார் மொழியை மதிக்குவரோ?
நந்தமிழ் மாநள்நரன் றோதமிழ் நந்நலம் நாடவேண்டும்
அந்தக ரெல்லாம் அவையேற லானார் அதுவும் நன்றோ?64

நன்றான வற்றை நலமோடு செய்ய நனிசிறப்பைச்
செண்டாகத் தந்து சிறப்போடு காத்துத் திருப்பணிகள்
அன்றாடஞ் செய்ய அருளீந்து காத்தே அறிவமுதம்
கொண்டோடி வந்து குறிப்பாக யீயக் குறித்தனனே! 65

குறித்த குறிப்பிற் குறையாவ துண்டு: குளக்கரையிற்
பறித்த பயிரிற் பிழையாவதுண்டு: பவளவாயாற்
சிரித்த சிரிப்பும் நகையாவ துண்டு: திருவுணர்வாற்
றரித்த உடையிற் றவறாவ துண்டு தவஞ்செய்வாயே. 66

செய்வாய் அறத்தைச் சிறப்புண்டு நாளை சிறுதவற்றில்
உய்வாய் யதன்பின் உயர்வான சோதி உளத்துறையும்
மெய்வா யடக்கி யமர்ந்து வணக்கம் விரும்பியற்ற
நொய்வாம்: துயரை நொறுக்கி நலத்தை நுழைத்திடுமே. 67

நுழைத்த நெறியே நுகர்கின்ற பேரின் நுடமறுத்துத்
திளைத்த பயனைத் திருவாகக் காட்டித் திருநெறியால்
நிலைத்த புகழை நிறுத்த வழிகாட்டும் நித்தநித்தம்
அழைத்த படியே அறிவோடு கேட்டே யழகடையே! 68

அழகை அடைய அமைப்பான தொண்டை யனுதினமும்
பழகும் நிலையிற் பணிவோடு செய்து பவிசதனை
இளகி நெருங்கும் இயல்பில் இயற்றி இனியபலன்
உலகு புகழ உவப்போடு பெற்றே யுயருவையே. 69

உயர உயர உயர்வான பேச்சும் உறுபணியும்
அயரா தியற்றி யறிவோடு சேவை யளந்துசெய்யச்
செயராமன் தன்னைச் சிறப்போடு செய்த திருவிறைதான்
துயர்போக நல்ல துணையீந்து காப்பான் தொடருவையே.70

தொடர்ந்த மனையில் துயர்வந்த போதும் துணிவுடனே
அடைந்த உறவை யளவோடு காத்தே யகமகிழ்ந்து
நடந்த கதையை வகையாக ஆய்ந்து நடப்பதிலே
இடந்தேர்ந்து நல்ல இயல்போடு வாழ்வை இயற்றுவையே71

இயற்றும் தொழிலில் இடர்வந்த போதும் இசைவுடனே
இயற்றி யதிலே இருநன்மை கண்டே யிறைவனது
கயிற்றைப் பிடித்துக் கடன்செய்து நல்ல கருத்துடனே
தயிரில் உறையும் பதமாக நல்ல தகையடையே. 72

தகையானே சேவை தரித்திரத் தாலே தடையானாலும்
வகையான வற்றை வகையாகத் தந்து வளர்த்துவிடும்
மிகையாகத் தேடிப் புதைக்கின்ற காசு விரைந்துமண்ணில்
வகையாக எந்த வளமீந்து காக்கும் மதித்தறியே. 73

மதித்த மனிதர் செயலெல்லாம் நன்றாய் மலர்ந்துவிடும்
பதித்த பனுவல் பதியிற் குருவைப் பவிசதாக்கும்
விதித்த நெறியை மதிக்கின்ற பேரே விரிபுவியில்
கதித்த நலனைக் கணக்கோடு பெற்றுக் கவியாவாரே! 74

கவியைக் கவியாகக் கண்டு படைத்திட்ட கம்பனவுன்
புவியிற சிறப்பைப் புகழாகப் பெற்று புதுநிலவாய்க்
குவிய அருளேற்றுக் குன்றாகி, சொர்க்கக் குகையினிலே
செவிய தினிக்கத் திருவேற்று விட்டான் தெரிந்தறியே. 75

தெரிந்தார் வழக்கைத் திருவாகப் பேசித் தினந்தினமும்
அறிந்தார் மகிழ அரணோடு தீதை யகற்றிடுவார்
மறந்தார் நெறியை மதியாது 'லஞ்சம்' மறைந்தடைந்து
துறந்தார் சபிக்கத் துயரேற்று வீழ்வார் துயரதன்றோ. 76

அன்றே குறளை யறிந்தோதி விட்டார் அறிந்திலையோ
அன்றே மறையை யறிந்தோதி விட்டார் அறிந்திலையோ
அன்றே நெறியை யறிந்தோதி விட்டார் அறிந்திலையோ
அன்றே நபியை அகமேற்று விட்டார் அறிந்திலையோ. 77

அறிந்த அறிவை அடுத்தார் தெரிந்தே யகமகிழ்ந்துத்
தெரிந்த நிலையிற் றிருவாகி நிற்கத் திணித்துவிடே
புரிந்த நெறியைப் புவிக்கோத என்றும் புதுவிறைதான்
சொரிந்த நிலையிற் சுகமீந்து காப்பான் சுவனமன்றோ. 78

சுவனப் பதவி சுகமோடு காணச் சுருதிநெறி
கவன முடனே கணக்கோடு கண்டு களிப்படையே
தவணை முடிந்தும் தகராறு பண்ணத் தரமதுவோ
அவனை நினைத்தே அறம்பேணி நல்லருள் அள்ளிவிடே.79

அள்ளும் வினையே அரணாகிக் காக்கும், அறிவுரையாய்ச்
சொல்லும் வினையே சுகமாகக் காக்கும் சுதியுணர்ந்துக்
கொள்ளும் இசையே குணமாகிக் காக்கும், குடும்பமதை
வெல்லும் பொருளே வினையாகிக் காக்கும் விதியறியே. 80

விதியை மறந்தார் வடமிட்ட யாக்கை விரைப்பெனவே
மதியை யிழந்து மரபின்றித் துன்பில் மயங்கிடுவார்
நிதியை மதித்து நெறியோடு காத்த நிமலரெல்லாம்
பதியைச் சுவனப் பதியாக மாற்றிப் படைக்குவரே! 81

படைக்கின்ற மாபணி பாங்குறப் பண்ணுமா பண்டிதனே!
நடக்கின்ற வற்றை நலமோடு காண மறந்தமையே
கிடைக்கின்ற வற்றைக் கெடுதலுக் கீந்து கிழமைநலம்
அடைகின்ற வாறாய் அடைந்துமே மக்கள் அழிகின்றாரே.82

அழிவதால் நன்மை யமையுமோ? தீதின் அவலமதைப்
பிழிவதால் நல்ல பெருமையோ? இந்தப் பிடிப்பினிலே
கழிவதா யுள்ள கடன்தீர்த்து ஞானக் களஞ்சியத்தில்
விழுவதாய் வீழ்ந்து நலந்தேர்ந்து நல்லருள்வேண்டுவையே.83

வேண்டிய பேர்கள் விமலன் தனையே விரைந்தடைந்தார்
வேண்டிய பேர்கள் நினைக்கின்ற வற்றில் விரிந்தநலன்
தூண்டிய பெற்றுத் துயர்போக்கி நந்நலத் தொண்டதனில்
ஆண்டகை யாகி யருளீந்த வாறானா ரறிந்திலையோ? 84

அறிவால் அறிவை யறிந்திட்ட பேர்கள் அறிஞரப்பா!
அறிவால் அறிவை யறிந்திட்ட பேர்கள் அவுவியாவாம்
அறிவால் அறிவை யறிந்திட்ட பேர்கள் அடியவரைத்
தெரிவார் அதுவே திருவான சேவை தெளிவுபெறே! 85

தெளிவு குருவின் திருவான சேவை திணித்துவிடும்
அழிவு மடைய ரணைப்பாலே சேர்ந்தே யழித்துவிடும்
இழிவு வருமுன் இறைவேண்டி நின்றே இனியபெயர்
கழிவு மறையக் கணக்கோடு பெற்றுக் களிப்படையே. 86

களிப்பு வருதல் பணத்தாலே என்று கருதுவதோ!
புளிப்போ டினிப்பும் புணர்ந்தவுடன் இன்பம் பொங்குமன்றோ
விழிப்பு தவத்தை விரிவாக்கும் என்றே விரிவுரைகள்
அழைப்பு விடுக்கும் அமைப்பாக வள்ளல் அறைந்தனரே.87

அறைந்த முளையில் அரணோடு கட்டும் அரியபசு
திரிந்து நடக்கத் திருவாமோ? ஓர் திருநெறியை
மறந்து நடக்க மதியாது நல்ல வகையுடனே
பிறந்து வளரும் பெரியோரைப் பேணிப் பிழைக்குவையே.88

பிழைக்க விழியின்றிப் பீடற மக்கள் பெருகுகின்றார்
களைக்க விடுதல் கவினாமோ? ஆளும் கலைஞர்களே!
தழைக்க வழிசெய்து தண்டமிழ் காத்துத் தரமுடனே
நிலைக்க உமக்கு நலமுண் டுயர்வை நினைக்குவையே!89

நினைத்த நினைப்பே நெறியான வாழ்வில் நிறுத்திநலம்
அணைத்த படியாய் அழகாக்கு மென்றே யறிந்துவிடே
கணித்த கணிப்பிற் கணவன் நிலையைக் கருதிமனை
இணைத்த படியா யெழுப்புவாள் நல்ல இனத்தவளே! 90

இனத்தைப் பிரித்தே இடராக எண்ணி இருப்பதனால்
தனத்தை யடையத் தடையாகி இன்று தவிக்கிறார்காண்
மனத்தை யடக்கி மனித இனமாய் மதித்துவரின்
தினத்திற் பிரிவு திசைமாறிப் போமோ? தெரிந்துவிடே. 91

தெரிந்தார் சமயம் திருவென்பார், மற்றார் திருடிவிட்டுப்
பிரிந்தார் விழிக்கும் பிழைபோலச் சாதி பெரிதென்பாரே
துறந்தார் இனத்தைத் துரியபு மிக்கே தொடர்ந்திழுத்துப்
பிறந்தார் செயத்தைப் பிடிக்க வழியிற் பிணிதீர்ப்பாரே 92

பிணியை யறுக்கப் பிழைசெய்யும் பேயைப் பிரித்துவிடு
மணியை உணர்ந்து மறைஞானம் தேர்ந்து வணங்கிவிடே
அணியை இழக்க அறியாரும் ஒப்பி யமருவரோ?
கனியை யடையக் கலைஞானந் தேர்ந்து களிப்படையே. 93

அடைய யடையப் பணத்துக்காய்த் தன்னை யழித்திடுவார்
அடைய யடையப் பணத்துக்காய் நட்பை யறுத்திடுவார்
அடைய யடையப் பணத்துக்காய் வாழ்வை யமைத்திடுவார்
உடைய சடத்தை உணராது பேசி உளறுவரே!. 94

உளறித் திரிந்தார் உயர்வான மோட்சத் துறைகுவரோ
கிளறித் திரிந்தாற் கெடுத லடையாத கேள்வியதோ
அலறித் திரிந்தால் அகன்ற உயிர்பின் அகப்படுமோ?
களறி முடியக் கதையென்னாம்? சென்று கலந்துவிடே. 95

கலந்துற வாடிக் கலைபேணிச் செய்யுங் கடமையிலே
அளந்து பொருளை யரணோடு பெற்றே யரிய புகழ்
தளர்ந்து விடுமுன் தமிழாலே மோட்சத் தலைப்படியை
இழந்து விடாம வினிதாகப் பற்றி இருந்துவிடே. 96

இருந்து புவியிலே எந்நாளும் வாழ்வை இயற்றுவையோ
மறந்து நடந்தால் மறுமையிற்பேறு என்னாம்? மதித்தறியும்
துறந்து பிழையாய் துணைபோக்கித் துன்பில் துடித்துவிடா
திருந்து குடியோ டுறவேற்று மோட்சத் திணைகுவையே.97

இணைந்திருந் திங்கே இனிய தொழில்கள் இசைந்தியற்றி
அணைந்த வுறவுக் களவோடு நன்மை யடுத்தியற்றி
மணந்த மனையொடு பிள்ளைகள் சேர மகிழ்ச்சியுடன்
அந்தணன் அன்பை யடைந்திட்ட வாறே அடங்கிவிடே. 98

அடங்கி இருந்தார் அரணாவார் மற்றா ரடமியற்றி
மடங்கி விழுந்து மரித்த நிலையில் மயக்குறுவார்
தொடங்கி இருக்கும் புவியினிற் றோன்றும் துயரறுத்து
முடங்கி இருக்கும் நிலைபோக்கி நல்ல பெயரடையே. 99

பெயரை உயர்த்திப் பிழையற்று வாழ்ந்தார் பெரியவராம்
பெயரை இழந்து பிழையோடு வாழ்ந்தாற் பிணியுளராம்
உயிரை விடுமுன் உரிய பெயரை உவந்தெடுத்துப்
பயிரை நிகர்த்த பலனோடு சொர்க்கப் பதியடையே! 100

பதியில் இருப்போர் பவிசோடு கற்றுப் பரமனவன்
விதியில் இணைய விளையாத தெல்லாம்விளைந்துவிடும்
மதியிற் றெளிவும் மனத்தில் மகிழ்வும் கடமையினால்
நிதியிற் சிறப்பும் நிலையான இன்பும் நெருங்கிடுமே!

அன்பர் உள்ளத் துறைவோனே!
அடியார் பிணியைத் தீர்ப்போனே!
நண்பர்க் கருளும் நல்லோனே!
நபிகள் தந்த வல்லோனே!

வறுமை போக்கும் மறையோனே!
வாழ்வில் வந்து நிறைவோனே!
பொறுமை யளிக்கும் புண்ணியனே!
புகழை நல்கும் கண்ணியனே!

வேதனை தீர்க்கும் வித்தகனே!
வெற்றியை நல்கும் நித்தியனே!
போதனை யளிக்கும் சத்தியனே!
புதியது செய்யும் பெரியவனே!

மங்கள வாழ்வு பெறவேண்டும்.
மதியில் ஞானந் தரவேண்டும்.
பொங்கிடுஞ் சேவை வரவேண்டும்
போதைக ளெல்லாம் அறவேண்டும்

நல்லார் நட்பில் சேர்த்துவிடு.
நாளும் தொழிலில் காத்துவிடு.
அல்லார் நட்பைப் போக்கிவிடு.
அறிஞர் மன்றில் தூக்கிவிடு.

கலைகள் தேர்ந்து நிலையோர்ந்து
கடமை செய்யப் பிழைதீர்ந்து
மலைகள் போலப் பணிசேர்ந்து
மாண்பை யடைய மதிப்பாயே.

## தமிழ் வாழ்த்து

### பல்லவி

தாயே தலை சாய்த்தனன் - தமிழ்த்
தாயே தலை சாய்த்தனன்.

### ( அ – பல்லவி )

மாய மயக்கந் தீர மறையின் நெறியிற்சேரண (தாயே)

### சரணம்

ஆய கலைகளுக்கா யாதர வானாய்
அரிய பணிகள் செய்யத் துணிந்தனன் காணாய்
வாயில் வரும்மொழிகள் அமைந்திடத் தேனாய்
வரமளித் தேகாப்பாய் பதமிகுந் தூணாய். (தாயே)

சங்கத் தமிழ்மொழிக்குச் சகலமாய் நின்றாய்
சமைந்த கவிதைகட்குள் நிறைதனக் குன்றாய்
அங்கம் பலதாய்நின்றே யகிலத்தை வென்றாய்
ஐயன் புகழைப்பாட வமைந்தன செண்டாய் (தாயே)

நித்தம் புலவர் நெஞ்சில் நிறைகிறாய் சீராய்
நிமிர்ந்தே யுழைப்பவற்கு நலத்தினைத் தாராய்
பித்தம் தெளிய வைத்துப் பிழைத்திடப் பாராய்
பேசும் சிறுவர் நாவில் பிழையற வாராய். (தாயே)

புலமை சிறப்பதள்குப் புகழ்தர வேண்டும்
புதுமை மலருதற்குப் பொங்குவாய் யாண்டும்
இளமை திரும்பிநின்றே இசைகளை மீண்டும்
எங்கும் படைப்பதற்கே இதமுடன் தூண்டும். (தாயே)

## யார் பார்த்தது?
### பல்லவி

ஐயனைப் பார்த்தது யாரு? — திரு
வருளாகி நிற்பதாய்ச் சொன்னார்கள் தேறு.

மெய்யான நபிகளும் சென்றார் - அங்குப்
பையவே திரைக்கப்பால் தங்கியே கொண்டார்
பொய்யான கதையில்லை தம்பி - இதைப்
புதிதான வேதமுங் கூறுது நம்பி.

அங்கிங்கி லாமலே எங்கும் - மாய
அருபியாய் நின்றுமே அன்பரிற் பொங்கும்
மங்கள மானநற் சக்தி - இதை
மனதிலே ஆய்ந்திடில் அதுதான் முக்தி

அண்டபின் டங்களில் நின்றும் - அதுக்
கப்பலாய்த் தாண்டியே அது - இது கண்டும்
முண்டிடுங் கருவிற்குள் சென்றும் - தினம்
முறையோடு காக்குது சிந்திக்கத் தண்டும்

தன்னிலை கண்டிட்டத ஞானி — அந்தத்
தலைவனை உருவமாய்ச் சொன்னாரோ? வாநீ
எந்நிலை கண்டாலும் தீனி — உண்ண
இல்லாது வாழ்வாயோ? அறிவுக்குள் பார்நீ.

தேடி யலைந்திட வேண்டாம் - நீ
தெளிவாக எண்ணிடில் மனந்துளித் பூண்டாம்
ஆடிடும் யாக்கையே கூண்டாம் - நல்ல
அன்பாலே பணிசெய்ய உணர்த்துதல் சான்றாம்

## கண்டேன்

### பல்லவி

ஐயனைக் கண்டுகொண் டேனே — சிறு
பையனைப் போல்வந்து மெய்யனைத் தானே.

கிச்சிக்கிச்சித் தாம்பூ லத்தை 1 மிக்கக்
கேலிய நாடியே மெஞ்ஞான வித்தை
கச்சிதமாய்ச் செய்(து) அவத்தைப் - போக்கிக்
காணாத காட்சியாய்த் தந்தானே சித்தை

கண்ணாமூச்சுவிளையாட — என்னைக்
கனிவோடு கூப்பிட்டான் ஆனந்தந் தேட
பொன்னாரக் கும்மிகள் பாடப் - புதுப்
பெண்ணென வந்திட்டான் புதுமணங் கூட

வேடிக்கை காட்டியே நின்றான் - கவி
வாடிக்கை யாய்ப்பாட மனதுக்குட் சென்றான்
கூடிக்கை சேர்த்துமே கொண்டான் - மிக்கக்
கும்மாளம் போட்டுமே நொடியினிற் சென்றான்

பண்ணிய கூத்துகள் கோடி — அதைப்
பாடி முடித்திட நாளாகும் போடி
நண்ணிய தாருள் கூடி — திரு
நாச்சிகுளத் தானா யாகினான் வாடி.

சுபம்.

# கர்த்தன் என்பது யார்?

## சீறாப்புராணம்

திருவினுந் திருவாய் பொருளினும் பொருளாய்த்
தெளிவினும் தெளிவதாய்ச் சிறந்த
மருவினும் மருவாய் அணுவினுக் கணுவாய்
மதித்திடாப் பேரொளி யனைத்தும்
பொருவினும் பொருவாய் வடிவினும் வடிவாய்ப்
பூதலத் துறைந்தபல் லுயிரின்
கருவினும் கருவாய் பெருந்தளம் புரந்தக்
கர்த்தனைப் பொறுத்துதல் கருத்தே!

## பொருள்

கர்த்தன் என்பவன்,.............................
குறிப்பிட்ட மக்களுக்கு மட்டும் உரியவன் - அல்ல அங்குமாய் - இங்குமாய் - எங்குமாய் - எல்லாமாய் -உட்புரமாய் - வெளிப்புரமாய்- -இயங்குவதாய் - உணர்த்தலாய் - உணரலாய் - விருப்பும் வெறுப்பும் இல்லாதவனாய் எக்காலமும் - எந்நேரமும் விழித்ததுவாய் 84 இலட்சம் படைப்பினங்களுக்கும் மூலமாய் - முடிவாய் இருப்பவனே கர்த்தன் - மனமறிந்து — குணமறிந்து நேரமறிந்து — உதவியவன் - உதவக்கூடியவன் நினைப்போரை — நினைப்பான்.
எனவே நினையுங்கள் -

## செயல்பாடு

தொழுதல் - தியானித்தல் - வணங்கல் - இறைஞ்சுதல்

## (எடுத்துக்காட்டு)

கடவுள் என்பவர் - (H.T.லையன் போன்றவர்) ஆலமரத்தின் வேரு போன்றவர். என்பதைத் திண்ணமாக (நம்ப) எண்ண வேண்டும்.

# கர்த்தர் என்பவர் யார்?
# சீறாப்புராணம்

சிறந்தமெய்ப் பொருளை அழிவில்லாத மணியைத்
தெரிந்து முக்காலமும் உணர்ந்து
துறந்தவர் இதயமென்ற ஆசனத்தில் இருப்பவனை
தொடர் இன்பம் துன்பம் அற்றவனை
பிறந்த பல்லுயிரின் மனத்தளவு உறைந்து
பிறப்பு இறப்பு எனஒன்று இல்லாதவனை
மலிந்தவர்: சுவர்க்கப் பதியையும் மறந்து
மண்ணினில் மதியை மறந்தவர்

## பொருள் விளக்கம்

துறந்தவர்: என்ற கருத்தை நன்கு சிந்திக்க வேண்டும் அவர்கள்தான் - அந்தணர் - போதகர் - உபாத்தியாயர் - உபதேசிகர் - குருமார் - ஞானதேசிகர் - கற்பிப்பவர் - உணர்த்துவோர் - ஓதிக் கொடுப்போர்: திருத்துவோர் வழிகாட்டுவோர் - புலவர் - அறிஞர் - ஆலீம் - சாமியார் - தொழுவோர் - தொழச் சொல்வோர் - கற்றுக்கொடுப்போர் இவரே - இறவைர் - கடவுளர் - தேவர் - பகவன் - கர்த்தர்.

## (எடுத்துக்காட்டு)

இவர்கள் (சர்வீஸ் லையன் போன்றவர்) ஆலமரத்தின் விழுதுபோன்றவர்கள் இவர்கள் கடவுள் அல்ல.என்று திண்மையாக (உணர) நம்ப வேண்டும்.

## ஆசிரியரின் குறிக்கோள்.

உலகமக்களுக்கு நல்லுபதேசம் செய்து ஆதியாகிய பரம்பொருளை தொழச்செய்தல் மேலும் தெய்வப்பணியாட்களை (தூதர்) பிரித்துக்காட்டல்.

குறிப்பு – மண்ணுலகில் மக்கள் பெருகிவருவதற்குக் காரணம்..

பிறந்த (மனிதன்) ஆத்மாக்கள் மோட்சம் பெறவில்லை என்பதாம்.

## பல்லவி

வணங்குதற் கேது நேரமே – இறைவனைநாம்
வணங்குதற் கேது நேரமே.

## அநுபல்லவி

பிணக்கமும் மாதராசை இணக்கமும் மாயும்பணக்
கணக்கையும் எண்ணிநாளைச் சுணக்கிக் கழித்து விட்டால் (வணங்கு)

## சரணம்

இருக்கும் பலத்தைக் கொண்டு பெருக்க நினைத்திடாமல்
பறக்கும் பணத்துக் காகப் பதைத்துப் பதைத்து நின்றால் - (வணங்கு)

விடிந்த பொழுதைக் கண்டு வடிந்த அழுக்கை நீக்கி
முடிந்த வரைக்கும் ஆசை படிந்து உழலுவோர்க்கு – (வணங்கு)

ஆசை நிறைந்த தாலே மாசு மிகப்பெருகிப்
பூசை முறைகள் விட்டுக் காசுக் கடிமை யானால் (வணங்கு)

எட்டிக் கனியனைய மட்டிக ளோடு சேர்ந்து
சுட்டித் தனங்கள் செய்து கெட்டுநா மலைந்தக்கால் - (வணங்கு)

மணக்கும் வாசனைபல கணக்கவே பூசிக் கொண்டு
மினுக்கித் திரியும் வேசை தனக்கு அலையும் போது – (வணங்கு)

பட்டம் பதவிதேட நெட்டி லலைந்துநாளை
முற்றுங் கழிப்போமானால் முடிவில் நாயனைத்தேடி – (வணங்கு)

தாயைத் தகப்பன் சேயை ஞேய மிழக்கப்பேசிக்
காயும் பொறாமையால் மாயும் நமக்கு இங்கு – (வணங்கு)

## கர்த்தன் என்பது H.T. லையன்
## கர்த்தர் என்பது சர்வீஸ் லையன்

உலகம் தோன்றிய காலந் தொட்டும் இன்றுவரை மனிதர்கள் குழப்பமாகவே (வாழ்ந்தும்) வாழ்ந்து கொண்டும் இருக்கின்றனர்.

ஆதி என்ற மூலப் பொருள் என்ன? அதன் தன்மை என்ன? என்ற தெளிவு இன்றும் மயக்க நிலையிலேயே உள்ளது.

இருள்நிலை என்ன? அது நமக்கு உதவுமா? பூரணம் - ஜோதி — வெளிச்சம் என்றால் என்ன? என்பதை நாம் முதலில் தெரிய வேண்டும். குறிப்பாக நமக்கு மின்சாரம் முக்கிய உதவிகளைச் செய்கின்றன. அது எவ்வாறு?

மின் உற்பத்தியாகின்ற (மூலம்) தளத்திலிருந்து நமது ஊருக்கு முக்கிய கம்பிகளாக மூன்று கம்பிகள் வருகிறது இன்றும் பார்க்கலாம்.அதற்கு H.T. லையன் (தாய்மை) என்பதாக வந்து "டிரான்ஸ்பாம" என்ற பெட்டிக்குள் (தியானம்,தொழுகை,வழிபாடு) நுழைந்து பின் சர்வீஸ் லையன் (பொது உபயோகம்) என்ற பெயரில் நமது இருப்பிடங்களுக்கு வருகிறது.

அப்படி வந்தாலும் திரிபீஸ் லையன் - சிங்கல் பீஸ் லையன் என்ற வகையில் பல நிலைகளில் பிரிந்து வருகிறது என்பதை நாம் கண்கூடாகக் காண்கிறோம்.

ஆய்வு

இந்த H.T. லையன் - சர்வீஸ் லையன் என்பது நமது அறிவிற்கு இலகுவாக உணர முடியும் அல்லவா? இப்படியான மின் இயக்கத்தில் H.T. லையன் என்ற கம்பிகளின் மின் இயக்கம் கூடுதலாக இருப்பினும் அந்த மின்சாரத்தை நாம்

பயன்படுத்த முடியாது. இந்நிலையே ஆதிநிலை- இதனை நாம் கடவுள் - இறைவன் - பகவான் என்று அழைக்கிறோம்.

அடுத்து சர்வீஸ் லையன் இந்தக் கம்பிகளில் வருகின்ற மின்சாரத்தை நாம் நமது தேவைக்கு ஏற்பப் பல கோணங்களில் பயன்படுத்துகிறோம். இதனை நாம் கடவுளா் - இறைவா் - பகவன் - தூதா் - தொண்டா் என்று அழைக்கவேண்டும் இப்படியாக ஆய்வு செய்தோமானால் மெய்ப்பொருளாகிய
பரம்பொருளுக்கும் மனிதராக வாழ்ந்த — வாழ்கின்ற (அந்தணன்) அன்பா்களுக்கும் உள்ள வேற்றுமை தெரியும்.

இந்நிலையில் ஆதி மனிதன் அவரது மனைவி அவரது மக்கள் அதன்பின் வந்த தூதா்கள் (நபி) தொண்டா்கள் - புத்தன் - வள்ளுவா் - ஏசு - நபிகள் இன்று வாழக்கூடிய தொண்டர்கள் யாா்? என் வினவுங்கால் இவா்களது தன்மை சா்வீஸ் லையன் இவா்கள் கடவுள் அல்ல. ஆனால் கடவுளா் - இவா்களிடத்தில் இருக்கின்ற மின்சக்தியின் தன்மையை தன்மை (மின்)யை நாம் பயன்படுத்தலாம் - பயன்படுத்த வேண்டும்.

அடுத்து மேலே கூறிய H.T. லையன் கம்பிகளில் மின் இயக்கம் (கடவுள்) உண்டு அதை நாம் நேராகப் பயன்படுத்த முடியாது பயனாகாது. அந்த மின் இயக்கத்தை மேலே கூறிய (கடவுளா் - இறைவா் - பகவன்) மனிதா்கள் - புனிதா்கள் மூலமே நாம் பயன்பெற வேண்டும்

**கருத்தும் எழுத்தும் நாச்சிகுளத்தாா்**
பன்னூலாசிரியா்,
உதயமாா்த்தாண்டபுரம் அஞ்சல்
திருவாரூா் மாவட்டம், 614 706.

## [கர்த்தருக்குக் காணிக்கை]

இன்பத்தமிழில் ஏசுநாதர் என்ற இனிய கவிதை
காப்பியத்தை தமிழ் சமுதாயம் படித்து இன்புற
வேண்டும் என்ற நன்நோக்கோடு எங்களின்
அன்பு காணிக்கையாக்குகிறோம்

Lr. S. ஆரோக்கிய ராஜ் M.A. M.A. ML. Med. Phd
உயர்நீதிமன்ற வழக்கறிஞர், சென்னை.

S. சிங்கராயர் B.A.
S.S.R. ரைஸ்மில், புனல் வாசல், தஞ்சை மாவட்டம்.

Er. S. சைமன் M.E, Med. M.Phil. Phd
பேராசிரியர் காருண்யா கல்லூரி, கோவை

அன்பன்

**நாச்சிகுளத்தார்**

மரபுக் கவிதைகள் மூன்று இலட்சம் பாடியவர்
என்பது குறிப்பிடத்தக்கது